உ

ஸ்ரீ குருப்யோ நம :

ஹர ஹர சங்கர ஜய ஜய சங்கர

# ஸ்ரீ காயத்ரீ மாஹாத்ம்யம்
# ஸந்த்யா வந்தன பாஷ்யம்
# யஜுர் உபாகர்மம்
# அமாவாஸ்யை தர்ப்பணம்



பிரகாசகர்: ஸ்வாமி ஸச்சிதானந்த ஸரஸ்வதி

மானேஜர்: சங்கர அய்யர்,

ஸ்ரீ ஆதிசங்கர பகவத் பாத வேத ஸபா

22, பிச்சு பிள்ளை சந்து, மயிலாப்பூர் : : மதருஸ்-4.

1966 காயத்ரீ ப்ரஸாதம்

உ

ஸ்ரீ ராமஜெயம்

# ஸ்ரீ காயத்ரீ மகிமை

"பாய்ந்தோடுவது தண்ணீர்; துள்ளிச் செல்வது மனம்; இரண்டையும் அடக்குந்தோறும், அவை சக்தி யில் பெருகும்". உதாரணமாக:-

தண்ணீரின் வேகத்தைத் தடுத்து (நிறுத்தி) மீண்டும் திறந்து விட்டால் அதன் வேகம் - அதினின்று உண்டாகும் மின்சாரசக்தி - ஒப்பற்ற நன்மை தரும் அல்லவா? மனத்தின் வேகத்தை அளந்தறிய இந்த உதாரணம் போதும்! இது போல் சிறு பருவத்தில் தொடங்கி, சிறந்த அக்கரையோடும் அன்போடும் செய்து வருகின்ற காயத்ரீ ஜபம், மானஸிகசக்தி - வளர்ச்சி - சிறுவர்களுக்குத் தாய்ப் பால்போல் மேன் மேலும் சிறந்த (ஒப்பற்ற) சக்தி யளிக்கும்! இதன் பெருமையைப் பல உதாரணங்க ளோடு மேலே காணலாம்.

இங்கு ஆதியில் நான்கு வேதங்களுக்கும் அரிய பெரிய பாஷ்யம் செய்தருளிய, ஸ்ரீவித்யாரண்ய பெரு மானது காயத்திரீ பாஷ்யத்தினின்று ஒரு சில-அரிய-விஷயங்களை மொழி பெயர்த்தளிப்போம்.

காயத்ரீ ப்ரசம்ஸை: சிறப்பு (வர்ணித்தல்)

மகா மந்திரமாகிய காயத்ரியையும், நான்கு வேதங்களையும் தராசில் வைத்து நிறுத்து பார்ப்ப தானல் நான்கு வேதங்களும் அமைந்த ஒரு தட்டுக்கு

நிகராகவே மற்ருெரு தட்டில் அமைந்த காயத்ரியும் சம எடையில் துலங்கும்! வேதங்களில் சாரமானவை எவை? உபநிஷத்துக்கள்! அவை ரகசியமானவை. ஆனுல் அவற்றின் சாரம் காயத்திரியும் மூன்று வியாஹ்ருதிகளும் ஆகும். பூ: புவ: ஸ—வ: என்பவை தாம் வ்யாஹ்ருதிகள்: "அவை [1] பூலோகம், [2] பூமியை தொடர்ந்துள்ள மேல் (இடையில் அமைந்த) லோகம், அப்பால் [3] சுவர்கலோகம் என்பவற்றை குறிப்பிடுவதுடன் அவை பரமாத்மாவின் சொரூபம்" என்ற அறிவையும் நமக்கு உணர்த்துகின்றன.

காயத்ரீ தேவியினது பெருமையை இவ்வாறு தெரிந்து கொள்பவன் சிறந்த பிராம்மணனுவன் இதனை இவ்வாறு தெரிந்து கொள்ளாதவன், நான்கு வேதங்களின் கரைகண்டவனுயினும், அவனை இழி குலத்தோன் என்றுதான் கருதுவர் பெரியோர்! என்று வியாசர் பெருமான் எச்சரிக்கை யிடுகின்ருர். பெரியோர் வாக்கினின்று அவ்விதச்சொல் பெறுதல் நலமன்றே!

## வேதமாதாவை (வேதத்தின் தாயை) காயத்ரீ என அழைப்பதேன்?

அன்போடு கானஞ் செய்பவனை-ஜபம்-செய்கின்றவரை விடாது பாதுகாப்பது எதுவோ அதனைத்தான் காயத்ரீ என்று அழைத்தனர் அறிவு, ஆற்றல் அனுபவம் மிகுந்த பெரியோர்; அது மாத்திரமா? காயத்ரீதான், வேதத்தின் தாய். காயத்ரீதான் பாவத்தை யெல்லாம் போக்கும் அன்னை! காயத்திரி

யினும் சிறந்தது இவ்வுலகிலும் இல்லை; அங்கும் (மேலுலகிலும்) இல்லை. ஆகவே, காயத்ரிதான், மிகமிகப் பரிசுத்தமான மந்திரம் எனவும் அப்பெரியார் முரசறைகின்றார்.

## காயத்ரீ ஜபம் செய்வோரின் பெருமையைக் குறித்து புகழ்தல்

ஒருவர் வேத வேதாங்கங்களை யெல்லாம் படித்த வித்வானாக இருக்கலாம்; யஜ்ஞம் தானம் பல செய்ப வராக இருக்கலாம். ஆனால் (அவர் காயத்ரீ தியானத்தைச் செய்யாவிடின்) சகல மந்திரங்களின் தாயாகிய காயத்ரீ தேவியை தியானம் செய்துகொண்டு விளங்கும் பரிசுத்தாத்மாவினது 16 கலையில் ஒரு கலை (ஒரு பங்கு) பெருமையையும் பெறுதற்குரியவரல்லர். இதன் சாரமான கருத்தென்ன? பிராமணர் இரு [3] வேளைகளிலும் மனம் பொருந்தி காயத்ரீ ஜபம் செய்து வருவாராயின், அவர் அஸத்துக்களின் பொருளைக் கைநீட்டி வாங்கியவரராயினும், எவ்வித பாவமும் அவரைத் தீண்டாது; அவர் பரமபாவனமான கதியை அடைவர்.

எது ஜபம் செய்வதற்குரிய லட்சணம்? (அல்லது அன்பு வேண்டுகோள்.) எல்லாம் வல்ல ஈசன் [பரமேசன்] எங்குட் வியாபித்து—இரண்டறக் கலந்து விளங்குகின்றானாயினும், அவன் காயத்ரீ தேவியை உபாசனம் புரியும் பக்தர்க்கு விசேஷ நன்மைகளை அளிக்கின்றான் என்பதை கவனிக்க வேண்டும். இங்கு பெரியாரான யாஜ்ஞவல்கிய முனிவர் பெருமான் தெரிவிக்கின்ற ஒரு உதாரணம் மிக அழகாக விளங்குகின்றது!

"பசுவின் பாலை நிறைய உட்கொண்டால் அது உடம்பிற்கு நல்ல வளர்ச்சியளிக்கும்" என்று பலர் கூறுகின்றனரல்லவா? அது அவ்வளவு சரியன்று!: ஏன் தெரியுமா? காயத்ரீ ஜபத்தில் தினந்தோறும் மனத்தைச் செலுத்தும் அன்பனுக்கு எப்பொழுதுமே நன்மை செய்யும் சுபாவம் கொண்ட 'சதாசிவன்' அந்த பசுவின் பாலிலுள்ள சத்தைப் பார்க்கினும், அதிகமான சத்தை அளித்து போஷித்து வருகிறுன். [அந்தத் தியானத்தில் நிலைத்தவனை!'] ஆனுல் சதா சிவன் காயத்ரீ ஜபம் செய்யாதவரிடமும் உள்ளீடாகி விளங்குவது உண்மைதானுயினும, காயத்ரீ உபாசனை யின் மூலமாக வேண்டிக் கொள்ளாதவருக்கு அவ் வாறு உதவி செய்ய இயலாதாம்! தட்டாதவனுக்கு யார் கதவைத் திறப்பார்? கேளாதவவனுக்கு எவர் கொடுப்பார்?

## ஜபம் செய்வதற்கு அமையும் இடத்திற்கேற்ப பல அளவு பலன்

வீட்டில் — பரிசுத்தமான இடத்தில்-அமர்ந்து காயத்ரீ ஜபம் செய்யலாம்; ஒன்றுக்கு ஒன்றுதான் பலன்? ஆனுல் ஓடுகின்ற நீரோடைப் பக்கம் அல்லது நதிக்கரையில் அமர்ந்து ஜபம் செய்தால் 1-க்கு 2 பங்கு பலன். பசு போஷிக்கப் பெற்றுவிளங்கும சாலையில் ஜபம் செய்தால் 1-க்கு 10பங்கு பலன் யாக சாலையாகிய அக்னிஹோத்ரசாலையில் காயத்ரீ ஜபம் செய்தால் 1-க்கு 100 பங்கு பலன். மஹான்கள் சித்தி பெற்ற ஸ்தலங்கள், ஸ்தல புராணம் [பாடல்] பெற்ற க்ஷேத்திரங்கள் என்பனவற்றிலும், தெய்விகமான— ஆலய—சந்நிதிகளிலும் செய்யும் ஜபம், ஆயிரம்—

லட்சம்—கோடிப்பங்கு பலன் தரும். ஆனல் பெருமாள் சந்நிதியிலே செய்யும் காயத்ரீ ஜபத்தின் பலனுக்கு எல்லேகூற இயலாது! அது அநந்தமான பலன் தருவது என்ருர் சிவபெருமான்! அது அன்பின் அளவை பொருத்தது போலும்!

## எங்தெந்த ஆசனங்களில் அமர்ந்து காயத்ரீ ஜபம் செய்யலாம்? அவற்றின் பலன் எத்தகையது?

இந்தக் கேள்வியை முன்னெருமுறை சில முனி வர்கள் கேட்டபொழுது ஸ்ரீ வியாஸபகவான் அளித்த விடை வருமாறு;

1. தர்ப்பாஸனம், 2. கம்பளம் [கம்பளி,] 3, மான் தோல், 4. பட்டு. 5. மரவுறி, 6. பலபத்திரம் என்பவை களே நல்ல ஆசனங்களாகக் கொள்ளலாம்.

1. தர்பாசனத்தில் உட்கார்ந்து ஜபம் செய்தால் பாவங்கள் போம். (பரிசுத்தம் உடலுக்கும் மனத் திற்கும் உடன் தோன்றும்.)

2. கம்பளியில் [இரத்தினக் கம்பளத்தில்] அமர்ந்து செய்தால் துக்கம் [துன்பம்] பாதியாது நீங்கும்.

3. மான்தோலில் அமர்ந்து செய்தால் ஞானம் வளரும். [சாந்தம் பெருகும்] மன அமைதியே ஒரு ஆனந்தமல்லவா?

4. பட்டு ஆசனத்தில் உட்கார்ந்து ஜபம் செய் தால் பாக்யம் விருத்தியாகும்.

5. மரவுறி பலத்தை வளர்க்கும். அனுபவத்தில் பார்க்கலாம். ஸ்ரீ ராமபிரான் உபயோகித்த பரிசுத்த மான மரவுறியினம், மலையாளத்தில் கிடைக்கும்.

6. பலபத்திரம் உடம்பை சுத்தி செய்வதாம்.

இனி, வேறு இரண்டு ஆசனங்களுக்கும் தனித் தனி பலன் கூறப்படுகின்றது. 1. கிருஷ்ணுஜினம் (மான் தோலை) உபயோகிப்பதுபோல் பெண் யானைத் தோலையும் உபயோகிப்பது உண்டு. அது பலவகை வியாதிகளையும் போக்கும். அக்காரணத்தை உணர்த்தவே போலும், சிவபெருமான் ஆனைதாண்டவ புரத்தில் அற்புத நடனம் புரிகிருர்! (பிறவிப்பிணிக்கு மருந்தளிக்கும் பெருமானே ஆனைத்தோலையணிந்தது, அனைவருக்கும் அதன் பெருமையை விளக்கத்தான் போலும்) புலித் தோலிலும் அமர்ந்து ஜபம் செய்ய லாம். அது மோட்சத்தை அளிக்கும்சக்தி வாய்ந்தது. ஆனுல், சந்நியாசிகளுக்கு (கோப தாபங்களை வெல் வதற்கறிகுறியாக) உள்ளது என்பர் பெரியோர்! இல்லறத்தாரிலும் உள்ளத்துறவுடையோர் இருத்தல் கூடும்.

## ஜபம் செய்யும்பொழுது எதனைக்கொண்டு எவ்வாறு எண்ணவேண்டும்?

சுண்டுவிரலின் அடுத்த விரலுக்கு அநாமிகை என்று பெயர். அதன் இரண்டாவது கணு (பருவம்) தொடங்கி. சுண்டுவிரலின் முதல்வரை வழியாக மேலேவந்து ஆள் காட்டுவிரலின் அடிக்கணுவரை எண்ணி வந்தால், தொகையும் பத்து கிடைக்கும்

நீண்டு நிற்கும் அடிக்கணுக்களாகிய இரண்டையும் ஒருமுறை வலம் வந்தது போலாயிற்று! இவ்வாறு செய்தலே, "ஒரு மாமேருப் பிரதட்சிணம்" என்றும் கூறப்படுகின்றது. இந்த மேருவை திடீரென்று தாண்டக் கூடாதாம்!

இந்த கணுக்களின் வழியாகவே காயத்ரியை எண்ணி (தியாணித்துக் கொண்டு) பன்முறை-எண் ணிக் கொண்டு ஜபம் செய்ய வேண்டும்.

## மாலைகளை உபயோகித்தல் அவசியமா?

காமியமான கோரிக்கைகளை உலகின் தாயான காயத்ரீ தேவியிடமிருந்துபெற விரும்புவோர், பல வித மாலைகளை கைக்கொண்டு ஜபம் புரியலாம். அதன் பலனும் பன்மடங்கு அதிகமாகும். உதாரண மாக: முன் தெரிவித்த அங்குல எண்ணிக்கையின் வழி அறியாது விரல்விட்டு எண்ணி ஜபம் செய்து வரின் ஒரு பங்குதான் பலன். அங்குல முறை அறிந்து. மேருவைக்கடவாது ஜபம் செய்யின், 10 கணக்காகும் 'புத்ர ஜீவ' என்னும் மரத்தின் கனி கொண்டு (மணிகொண்டு) ஜபம் செய்தால், 1-க்கு 100 பங்கு பலன். பவழத்தால் மாலை கட்டி அதன் வழியாக ஜபம் செய்தால் ஆயிரம் பங்கு பலன். முத்துமாலைகொண்டு ஜபம் புரியின் பதினுயிரம் பங்கு பலன். பொன்னினுல் மணி செய்து அதன் வழியாக ஜபம் செய்தால் லட்சம் பங்கு பங்கு பலன் தரும். தர்ப்ப முடிவினுல் எண்ணிக்கை செய்து ஜபம்இயற்றல் கோடி பங்கு பலன். துளசிமணிகொண்டு எண்ணி

ஜபம் புரிதல் அநந்தமான பலன் தரும். ருத்திராக்ஷ மணிகொண்டு ஜபம் புரியின்,அதன் பலன் தன்னாலும் கூற இயலாது என்று. பார்வதியை நோக்கிப் பரம சிவன் கூறியிருப்பதாகப் புராணம் பேசுகின்றது.

குறிப்பு :— இங்கு தெரிவித்த புத்ரஜிவிமணி அலகபாத்தில் விற்கப்படுகின்றது. அது பத்ராக்ஷ மணியினும் பெரிய அளவில் மழ மழப்பாகவும் இருக்கும்.

இனி, ஆசிரம மாறுபாட்டிற்கேற்ப ஜபம் செய்ய வேண்டும்! அதன் விசேஷ முறையை, 18 ஸ்மிருதி கர்த்தர்களில் ஒருவராகிய 'இயமன்' என்பவர் விளக்குகின்றார்; பிரும்மசாரி, கிருஹஸ்தர் இருவரும் 108 வீதம் காயத்ரீ ஜபம் செய்ய வேண்டும். வனவாசத்தை மேற்கொண்டு விளங்கும் வானப்பிரஸ்தரும். சந்யாசிகளாக விளங்கும் 4-வது ஆசிரமிகளும் தினம் 2000 உருவுக்கு அதிகமாக ஜபம் செய்ய வேண்டும். (இது பெரியோர் மூலம் அறிதற்குரியது).

## காயத்ரீ ஜபத்தைக் குறித்து இல்லறத்தார்க்கு ஒரு எளிய முறை

இல்லறத்தானாகிய கிருஹஸ்தனுக்கு வேலை பல இருக்குமாதலால், அதற்கேப சிறிது அநுகூலமுறை விளக்கப்படுகின்றது. அதாவது, இல்லறத்தான் 108 முறை ஜபம் செய்ய வேண்டியதுதான். ஆனால் வேறு வேலை இருப்பின் என் செய்வது? அதிற்பாதியாகிய 54 முறையேனும் செய்தல் நலம். அல்லது 27 செய்தல் மூன்ருந்தரமாகும். அதினின்றும் குறைவாக செய்யும் முறை கூறப்படவில்லை!

## காயத்ரியை 'அதிகமாக' ஜபம்-செய்யத்தகாத காலங்கள்

சிராத்தம், பிரதோஷவேலே, அமாவாசை ஆகிய நாட்களில் காயத்ரீ ஜபத்தை 10 முறை செய்தல் தகும். வேதங்கள் கற்கக்கூடாத (அநத்தியயன) நாட்களில் 28 முறை ஜபம் செய்தலே போதுமானது. இவை யல்லாத 'பிற' காலங்களில் வழக்கம்போல் குறித்த முறை அளவு ஜபம் செய்யத்தான் வேண்டும்.

## ஜபத்தை எவ்விதம் செய்ய வேண்டும்?

காலேயில் கைகளேத் தூக்கி மலர்த்திக்கொண்டு ஜபம் செய்ய வேண்டும். மாலேயில் மூடிய கைக ளோடு செய்யலாம். நடுப்பகளில் கைகளேக் கீழ் அமர்ந்தபடி குறுக்காக வைத்துக் கொண்டு செய்ய வேண்டும். கைகளே ஆடையினுல் (வஸ்திரத்தினுல்) மூடிக்கொண்டு [முக்கியமாக வலக்கையைப் போர்த் திக்கொண்டு] தான் ஜபம் செய்தல் சிறப்பு என்று வேருெரு நூலில் விளக்கப் படுகின்றது. (காயத்ரீ அனுஷ்டான தத்வ பிரகாசிகை).

சாதாரணமாக வாயினுல் உச்சரித்து காயத்ரி செய்தற்கு, பலன் ஒரு பங்குதான்; ஜபமுறையாகச் செய்தால் 10 பங்கு பலன், உதடசைந்த அளவில் செய்தால் 100 பங்கு பலன் தரும். மனத்தினுலேயே செய்யின் ஆயிரம் பங்கு பலன் அளிக்கும்!

உதடு அசையும்படி செய்தால் உபாம்சு ஜபம் என்று கூறப்படும் (பற்களே மூடிக்கொண்டு நாவை

மட்டும் அசைத்து சத்தம் வெளிவராதவாறு ஜபம் செய்தலே உபாம்சுவாம்.) மனதினுல் மட்டும் செய்தல் தான் மானசிக ஜபமாகும். காலையில் சந்த்யா வந்தனம் செய்யும் பொழுது, நின்றுகொண்டு காயத்ரியை ஜபம் செய்ய வேண்டும். சூரிய பகவான் உதயமாகி அவரது தர்சனம் கிடைக்கும் வரை ஜபம் செய்து முடித்தலே உத்தமம்.

நடுப்பகல் சந்த்யாவந்தனம் உட்கார்ந்தவாறு செய்ய வேண்டும். மாலை நன்ருக அமர்ந்து, நட்சத்திர ஒளி புலப்படும்வரை ஜபம் செய்தலே மேல்.

சூரியனைப் பார்த்துக்கொண்டே செய்தலும் ஒரு பொது முறைதான். கண்ணில் சிற்ருெளி பாய்தலே போதும்!

## எது ஞாபகத்தில் (நினைவில்) இருக்க வேண்டியது?

**1.** விரல்விட்டு எண்ணிக்கொண்டு, காயத்ரியை ஜபம் செய்தல், நடு விரலின் அடிநடுவரைகளாக (இருவரையாக-அமைந்த) மேருவைத்தாண்டி, எண்ணிக்கையிட்டு ஜபித்தல், எண்ணிக்கையில்லாது மீண்டும் மீண்டும் ஜபம் செய்து வருதல்; அவசர அவசரமாக ஜபித்துக்கொள்ளுதல் ஆகிய நான்கு முறைகளும் பயனற்றவை!

**2.** காயத்ரீ மந்திரத்தில் மொத்தம் 24 அட்சரங்கள் அடங்கியுள்ளனவல்லவா? அவை ஒவ்வொன்றுக்கும் ஒரு தேவதை கூறப்படுகின்றது. (அதனை 2-ம் பாகத்தில் விளக்குவோம்) ஜபம் செய்யுங்கால், அந்தந்த அக்ஷரங்களின் அபிமானிகளான தேவதை

களின் நினைவும் இருத்தல் அவர்களின் அருளையும் பெறுதற்குரிய எளிய வழியாம்.

### காயத்திரியில் எத்தனை பதங்கள் அடங்கியன?

மொத்தம் 10 பதங்கள் அமைந்துள்ளன. அவை 1. தத், 2. ஸவிது; 3. வரேண்யம், 4. பர்க்க: 5. தேவஸ்ய, 6. தீமஹி; 7. திய; 8. ய: 9. ந: 10. ப்ரசோதயாத் என்பனவாம்.

இவற்றின் பொருள் தொகுப்பு வருமாறு;—

1. ய:- எந்த ஸவிதா என்னும் சூரியபகவான்

2. ந:- நமது

3. திய: - (தர்மம் முதலியவற்றில் செல்லும்) புத்திகளை (சித்த விருத்திகளை-எண்ணக்கதிர்களை)

4. ப்ரசோதயாத்-ஏவுகின்றரோ

5. தத்-அந்த

6, 7, ஸவிது: தேவஸ்ய-[எல்லா உயிர்களிடத்தும் உள்ளீடாகி அறிவோடு விளங்கி ஏவிநிற்கும்] தெய்வத்தினது.

8. வரேண்யம் - [அனைவராலும் விரும்பி வேண்டத்தக்கதும்] கொண்டாடத்தக்கதும் ஆகிய பரம் பொருளினது.

9. பார்க்க: - சேவிக்கத்தக்கதும் (அறியாமை என்னும் இருளினை அகற்றி விளங்கும்) ஆத்ம ஜோதி வடிவமுமான அகண்ட ஜோதியை

10. தீமஹி:-நாம் [நாங்கள்] தியானஞ் செய்கின்றோம்!

## இதன் விசேஷக் கருத்து யாது ?

சுமார் 30 பாஷியகாரர்வரை இந்த காயத்ரி மகா மந்திரத்தின் கருத்துரை எழுதுவதில் ஈடுபட்டு ஆனந்தத்தில் திளைத்திருக்கின்றனர்! அத்தகைய திவ்ய மந்திரத்திற்கு தமிழில் மிக மிகச் சுருக்கமான ஒரு சாதாரணப் பொருள்தான், சிறுவர்க்கும் விளங்கு மாறு இங்கு தெரிவிக்கப்பெற்றது. பிற கருத்துகளைப் பிற் பாகத்தில் ஆராய்வோம்,

இதற்கு பல மஹான்கள்-மதாசாரியர்கள் தெரி வித்திருக்கின்ற சூக்ஷ்ம பொருள்களை அந்தந்த பெரி யோர் பரம்பரைவழி அறிந்து கொள்ளுதலே சிறந்த முறை. இங்கு அனைவர்க்கும் விளங்கத்தக்க பொது பொருள் கூறப்படுகிறது. இதில், எது சராசர வடிவ மாய் நின்ற [அசையும் பொருள் அசையாப் பொருள் ஆகிய] உயிர்களுக்கெல்லாம் மூலகாரண வஸ்துவாகி அந்தரத்தில் அநுதினமும் உதயமுமாகி, அவற்றை யெல்லாம் பற்பல தொழில்களில்-செயல்களில்-ஈடு பட்டுச் செயல் புரியுமாறு ஏவுகின்ற ஜோதி வடிவமாய் விளங்குகின்றதோ, எது உயிர்களின் மனத்தில் உள் ளீடாகி ஒளிர்கின்றதோ, அத்தகைய உள்ளும் புற மும் பரவி நிறைந்து இயங்கும் எல்லாம் வல்ல (மன வாக்கினிற்கு எட்டாத) சக்தியை, நாம் மன மொழி மெய்களால் போற்றுகின்றோம், [ஹிருதயத்தில் தியானம் செய்கின்றோம்] என்ற பொதுக்கருத்து ஒளிர்கின்றது!

## காயத்ரீ ஜபமும் பிரம்மதேஜஸின் வளர்ச்சியும்

இவ்விதம் ஒப்பற்ற [ஞானக் கருத்தமைந்த] காயத்ரீ மந்திர கருத்தை மனதில் பதித்து ஜபம் செய்பவரின் முகத்தில் ஒரு மஹத்தான சாந்த ஒளி வீசிக்கொண்டிருக்கும். இவ்விததேஜஸ் உண்டாவதன் காரணம்என்ன? "யத்பாவம் தத்பவதி" "எதை நினைக்கின்ருனே, அதாகின்ருன் மனிதன்" என்பது. ஒரு உண்மை பழமொழி! இங்கு காயத்ரீ ஜபம் செய்வோர் மனத்தில், "எதனை, எவ்வாறு' 'நினைக்கின்றனர்? முதலில், "ஓம், பூ; புவ; ஸுவ;" என்ற வ்யாஹ்ருதிகளை உச்சரிக்கும் பொழுதே, அவர்களின் இருதயம்—'சங்கல்ப சக்தி!'—பூலோகம், புவர்லோகம், சுவர்க்க லோகம் என்ற மூன்றையும் பற்றிச் சென்று, அப்பால் ஆகாயத்தினிடையில் விளங்கும் சூரியபகவானை வணங்கி அங்கிருந்தபடி தனது ஹ்ருதயத்தில், உள்ளீடாய் விளங்குகின்ற ஜீவாத்மா, பரமாத்மாவோடு இரண்டறக்கலந்து முகத்தின் வழியே மலருகின்றது; கண்ணொளி வழி பிரகாசிக்கின்றது. இதனையே பிரம்ம தேஜஸ் என்பர் பெரியோர். இந்த பிரம்ம தேஜஸ் அழிவற்ற சக்தியையும், அழகையும், ஆனந்த வாழ்வையும் அவரவர் விரும்பும் பிறவற்றையும் அளிப்பதாகும்! காயத்ரீ மந்திரத்தை தாயின் வடிவமாக அமைத்ததேன்? காயத்ரீ ஜபம் செய்வோரது முகத்தில் ஒளிரும் காந்த சக்தி- தாய்ப்பாலைப் பருகி வளரும் குழந்தையின் முகத்தையே நிகர்த்து விளங்குவதால், காயத்ரீ மந்திரத்தை தேவியின் திருமேனியாக—அன்னையின் வடிவமாக அனுப

வத்தில் கண்டு கூறினர் பெரியோர்! அந்த அருளன்னே வாழ்க!

## ஸ்ரீ காயத்ரீ தேவியின் தனிப் பெருமை.

1. உலகில் தாய்போல் பல மாதரிருப்பினும் நம்மை ஈன்றெடுத்த தாயின் பெருமை தனித்து விளங்குவது போல், காயத்ரியைப் போன்று பல மந்திரங்கள் வேதத்திலிருப்பினும் அவை வேத மாதாவான காயத்ரிக்கு நிகராவன அன்று. உதாரணமாக:-

"1. க்ரியை [நற்காரியம்] ஒன்றும் செய்யாதிருப்பவன், 2. மூர்க்கன் 3. பெரியநோய் கொண்டவன் 4. மனம்போல் ஆசரணே கொண்டவன் என்ற இந்நால்வருக்கும் வாழ்நாளுள்ளவரை, தீண்டல் காத்தல் தகும், என்று கூர்ம புராணத்தில் ஸ்ரீ வியாசர் பெருமான் தெரிவித்திருக்கின்ருர்! இத்தகைய பாப ஜன்மம் பெற்றவர் கூட எந்த மஹான்களின் உபதேசத்தையேனும் பெற்று, பதினுயிரம் முறை காயத்ரீ ஜபம் செய்யின் அவரது குற்றங் குறைகள்-தோஷங்கள் பாவங்கள் பஞ்செனப் பறக்குமென்று அதே வ்யாஸர் பெருமான் வேருேரிடத்தில் தெரிவித்திருக்கின்ருர். 'ஆகவே,காயத்ரீதான்-புத்திரனேப் பரிச்சுத்தஞ் செய்யும் தாய் போன்றதென, முடிவாகின்றது.

2. ஆனுல், காயத்ரியை மனத்தில் அறிந்து கொண்டு மட்டும் நின்று விடுகின்றவர்க்கு காயத்ரியின் அருளேப் பெறமுடியாதாம்! ஏன் ? பசுவின் மடியில் பாலிருப்பதைஅறிகிருேம். ஆனுல் அதனே,கை கொண்டு கறந்து, பாத்திரத்தின் உதவிகொண்டு

உட்கொண்டவர்க் கல்லாது நோய் நீங்குமா ? பசி தீருமா? போஷிப்பு கிடைக்குமா? முகச் செழிப்புதான் துலங்குமா? அதுபோன்று, காயத்ரியினது ஜபத்தின் தன்மைக்கேற்ப பயனளிக்கும் ஈசன் காயத்ரீ ஜபம் செய்வோர், செய்யாதோர், ஆகிய இருவரது உள்ளத்திலும் அமைந்திருக்கின்ருராயினும், காயத்ரீ ஜபம் செய்தல் என்னும் முயற்சிகொண்டு வேண்டுபவரே ஈசனது அருளேப்பெற இயலும். ஆகவே கறந்தவர்க்கே பால் கிடைப்பதுபோல், ஆண்டவன், காயத்ரி மூலமாக வேண்டுவோர்க்கே அவரது அருள்கிடைக்குமாறு ஒரு வழி வகுத்திருக்கின்ருர் போலும்!

## உள்ளத் தூய்மை யளிக்கும் உயர் காயத்ரி!

உடலே தண்ணீர்கொண்டு கழுவித் தூயதாக்குகின்ருேம் எப்பொழுது? தினந்தோறுந்தான்! அந்த உடலில் சுற்றுய ஆடையையும் நீரில் நனேத்து, சவுக்காரமிட்டு மினுமினுக்கச் செய்கின்ருேம்! எப்பொழுது? தினந்தோறுந்தான்! அதுபோல உள்ளத்தையும் (ஏன்? 'ஈசன் அங்கு வாசம் செய்கின்ருராம்!' அரசர் அமரும் இடத்தை அழகு செய்ய வேண்டாமா?) தூய்மையாக வைத்திருக்க வேண்டுவதே! அதற்காகத்தான் காயத்ரியை ஜபிக்க வேண்டுமாம். பத்து முறை ஜபம் செய்தால் அன்ருடம் அறிந்தும், அறியாமலும் செய்த பாவம் அப்படியே கரையுமாம். 100 முறை காயத்ரீ ஜபம் செய்தால், முன் செய்த பாவமும் மனதினின்று நீங்குமாம். பதினுயிரம் காயத்ரீ ஜபம் புரிந்தவர், பலவகை பாவம் செய்தவராயினும், அவை நீங்கி, பரிசுத்தராக விளங்குவராம் அழுக்கற்ற

கண்ணுடியில் முகம் நன்ருக விளங்கும்! அதுபோல தூய்மையுள்ள நெஞ்சில் ஈசனது அருள் விலாஸம் மேன்மேலும் தாண்டவமாடும்! வாழ்வின் ஆனந்தத்தை வையகத்தில் தூய்க்கவழி இதுவாம்.

## அஹிம்ஸை யஜ்ஞம் (அல்லது) ஜப யஜ்ஞத்தின் பெருமை

கண்ணன் கீதையில் தெரிவித்த யஜ்ஞங்கள் பல. அவற்றில், ஒன்று ஜபயஜ்ஞம்! ஆனுல், இந்த யஜ்ஞ [யாகத்]தில் இம்சை இல்லை. இந்த ஜபம் செய்யும் முறையினுல் துதிக்கப்பெற்ற தேவர்கள் மனமகிழ்ந்து அருள் புரிந்து செல்கின்றனர்! இதற்கு விச்வாமித்திரரே சாட்சி! அதனை யுணர்த்தவே இங்கு காயத்ரீ மந்திரத்திற்கு விச்வாமித்திரர் ரிஷியானுர், என்பது நினைவிருக்க வேண்டும்.

## இங்கு வேறுசில பொதுக் குறிப்புகளும் நினைவிற் குரியன!

1. ஜபம் செய்யும்போது கிருஷ்ணஜினம் என்னும் மான்தோல் உபயோகிக்கலாம் என்று முன்பு தெரிவிக்கப்பட்டதல்லவா? அங்கு ஒரு சிலரே (யாகம் செய்தவர்களே) அதனை! உபயோகிக்கவேண்டும் என்பதை அறிவுறுத்துகிருேம்!

2. அதுபோலவே, ஒருவர் உபயோகித்த ஆஸனம் படுக்கை, ஆடை, கமண்டலம் [தண்ணீர் உப

யோகிக்கு ம்பரிசுத்தக்கருவி என்பனவும் அவரவர்க்கே உரியன. பிறர் அவற்றை உபயோகித்தல் தகாது. இவை அவரவர் மனைவியும் மக்களும்போல, அவர வர்க்கே உரியன. என்று வியாசர் வரையறை செய்துள்ளார்.

3. இனி ஜபம் செய்யும்போது ஒரு காலினால் மற்றொரு காலை தொட்டு தாங்கி நின்று ஜபம் புரிதல்' ஆடைகொண்டு தனது சிரஸை மூடிக்கொண்டு ஜப மியற்றல்; கை கால்களை தடவிக்கொண்டும், கண்களை தேய்த்துக்கொண்டும், பேசிக்கொண்டும், வம்புவார்த் தைகளில் செவியைப் பறிகொடுத்துகொண்டும் ஜபம் செய்தல் ஆகியன எவ்வித நன்மையும் அளியாது!

4 மனத்தூய்மை (கோபதாபங்களில் புகாத சாந்த நிலை) மௌனம், மந்திரத்தின் கருத்தில் மனம் ஊர்ந்து விளங்குதல், வெறுப்பின்மை, பரபரப்பின்மை மகிழ்ச்சியுடைமை, இவை காயத்ரீ தேவியின் அருளை எளிதில் அளிப்பன!

5. ஜபத்திற்கு மாலைகளை தேர்ந்தெடுக்கும் பொழுது கவனிக்கவேண்டியவை: மணிகள் தேயா திருத்தல். துளை ஒரே விதமாக இருத்தல், மணிகள் உடையாது முழு ஆகிருதி வாய்ந்திருத்தல், ஒன்றோ டொன்று பொருந்தியிருத்தல் (சலசலப்பு சத்தத்திற்கு இடமின்றி,) அங்கஹீனமின்றியிருத்தல், கண்ணுக்குப் பார்வையாக இருத்தல், அறுந்தகயிறின்றி யிருத்தல், பாஷண்டியின் கை படாதிருத்தல், மிகப் பழமையின்றி புதிதாயிருத்தல், மிகப் பழைய நூலில் கோர்க்கப்படா திருத்தல் இவை விரும்பத்தக்கன. இதற்கு மாறாக

இருப்பின், அவை ஜபம் புரிவோர்க்கு வாழ்வில் மேன் மேலும் துன்பம் தந்து கொண்டிருக்கும்.

ஆகவே, ஜபமாலைகளை தேர்ந்தெடுப்போர், சுத்த மான மணிகளைத் தம் கண்ணால் தெரிந்தெடுத்து மாலையை அமைத்துக்கொள்ளவேண்டும்.

6. மாலையில் 108 மணிகளிருத்தல் உத்தமம்: 54 மத்யமம். 27 மூன்றாந்தரமாகும்.

7. மாலையிலுள்ள கயிறு ஆள்காட்டி விரலில் படாது கட்டைவிரல்களினால் மாத்திரம் மணிகளை நகர்த்தி எண்ணவேண்டும். அதாவது ஆள்காட்டி விரலின் நடுவரையில், மணிமட்டும் பொருந்துமாறு, அமைத்து ஜபம் செய்யவேண்டும். இவ்வாறு செய்யின் விரும்பிய ஸித்தியளிக்கும்.

8. கட்டைவிரலினால் எண்ணி ஜபம் செய்தல் மோட்சம் அளிக்கும். ஆள்காட்டி விரலினால் ஜபம் புரி யின் பகைவர் அழிவர், நடுவிரலினால் ஜபம் செய்யின் செல்வம் விருத்தியாகும். நான்காவது விரலாகிய மோதிர விரலினால் செய்தல் சாந்தியை அளிக்கும். (சாந்தி விஷயமாக செய்யும் ஜபத்திலும் இவ்விரலை உபயோகித்தல் தகும்) சுண்டு விரல்கொண்டு ஜபம் செய்தல் ஆகர்ஷணத்திற்குரியது. விரும்பிய கோரிக் கையைக் கவர்ந்து வருவது!

## பிரணவ மகிமை

ஓங்காரத்திற்கு 'பிரணவம்' என்று பெயரிட்டழைக்கின்றோம்! ஏன்? அது. ப்ர (எப்பொழுதும் அல்லது மிகவும் நவம்-புதிதான தொனியோடு தோன்றுவது தான்! ஒரு முறை உண்டான பிரணவ நாதம் மற்றொரு முறை ஏது? மேலும், அ உ ம் என்ற மூன்றெழுத்து சேர்ந்தது தான் ஓம். உயிர், உலகம், உயிரிலும் உலகிலும் கலந்த ஈசன், ஆகிய 3 சூட்க்ஷம நிலையையும் விளக்கி கடலின் ஓசை போல், ஓம், ஓம், ஓம் என்று உத்கோஷித்துக் கொண்டு மூலாதாரத்தில் விளங்கும் ஓங்கார நாதம்தான், நாத பிரம்மமாகின்றது! பலாசின் இலையை அதன் நடுக்காம்பு தாங்கி நிற்பதுபோல் இந்த பிரணவ தத்துவம் தான், இவ்வுலக முழுவதையும் தாங்கி நிற்கின்றது!

வேதக் கனியாகிய உபநிஷத்தின் சுவை யோசை "ஓம்!' என்று கூறி முடிக்கின்றது. சாந்தியில் லயிக்கின்றது.

இந்த பிரணவத்தை உச்சரிப்பு முறையறிந்து இதன் பொருளை மனதில் பதித்து-ஜபஞ் செய்துவரின் பாவமுழுதும் எரிக்க பெறும். (பஞ்சின்மீது பாய்ந்த தீப்பொறியின் செயலே போல!

(பிரணவ"ஜபம் தொடர்ந்த அநுஸந்தானம் (தியானம்)-பாவத்தை தேய்த்து பரிசுத்தமாக்கும் திறம் வாய்ந்தது. உதாரணம்: பிராணாயாமம் செய்தால் உடம்பின் உள்ளே அமைந்த நாடிகளின் அழுக்கு அழிக்கப்படும். பிரணவத்தை தியானஞ்செய்தால்

பிறவியை தொடர்ந்து வரும் துன்பமும் தீர்ந்துபோம்! ஓங்காரத்தொனியில், மனதை தாரணம் செய்தால் (நிறுத்தினுல்) பிறவியினின்று விடுதலேயும் பெறுதல் திண்ணம் என்ருர் கண்ணன் கீதையில்.

அமுதத்தை நிறைய உட்கொண்டு மனத்திருப்தி பெற்றவனுக்கு பாலருந்த வேண்டுமென்ற நப்பாசை தோன்றுமா? தோன்ருது! அதுபோல். ஓங்கார நாதத்தில் மனம் ஊன்றி, ரமித்தவர்க்கு பிற விஷயங்களே அறிந்தடையும் விருப்பத்திற்கிடமேது? இதனுல் தான் எல்லாவித மந்திர பிரயோகங்களின் முடிவிலும் 'ஓம்' என்ற மந்திரம் உச்சரித்து முடிக்கப் படுகின்றது. ஏன்! நாம் கண்ணுல் காண்கின்ற வஸ்துக்களும் காதால் கேட்கின்ற பொருள்களும் நாவினுல் சுவைக்கின்ற பொருள்களும் அந்த பிரணவத்தோடு ஐக்கியம் பெற்று விளங்குகின்ற பிராணனிலிருந்துதான் உண்டாயின! ஒடுங்குவதும் அங்குதான்! நாம் உற்பத்தி யானதும் பிராணனி லிருந்துதான் அல்லவா? (பிரஜ்ஞையும் பிராணனும் சேர்ந்தது தான் பிரபஞ்சம்.)

## பிரணவத்தில் அடங்கிய சக்தி!

அரசின் கட்டைகளுக்கு அரணி என்று பெயர். அவற்றை ஒன்றின் மேலொன்ருக அமைத்து. ஒரு மத்தின்மீது கயிறு இட்டு தயிர்கடைவது போல் கடைந்தால். உடன் தீப்பொறி பறந்து, ஜொலிப்பதை காணலாம். அதுபோல், "நமது உடலேயே அரணியின் கீழ்க்கடையாக கருதி, பிரணவ நாதத்தை அதன்

மேல் கட்டையாக வைத்து (பாவித்து) தியானம் செய்தல் என்னும் மத்தினுல் கடைந்தால், மறைந் திருக்கும் ஈசன் (ஜோதி) முன்வந்து தோன்றுவதைக் காணலாம்". என்ருர் ஸ்ரீயோகி யாஜ்ஞுவல்கியர் பெரு மான். அதுவே பிரணவத்தின் மகிமை. அது ஈசனது தர்சனத்தையும் அளிக்கவல்லது. அதற்குரியவாறு ஸ்ரீகுருநாதன் வழிகாட்டுவாராக.

## பிராணுயாமம்-அதன் ரகசியங்கள்

பிராணுயாம விதிமுறையை ஸ்ரீயோகியாஞ்ஞுவல் கியர் பின் வருமாறு விளக்குகிருர்:-

"பூரகம், கும்பகம், ரேசகம், என்று பிராணுயா மம் மூன்று லக்ஷணம் (பிரிவு) வாய்ந்ததாகும். மூச்சுக் காற்ருேடு, வெளிக்காற்றும், நாசியின் வழியே நீண்டு உள்ளே சென்று "த்ருத்தியைப் போல் நிறைய செய் தல்" பூரகம். (காற்று உள்ளே பூரிக்கும்படி செய்தல். பூரகம் என்ருலும் பொருந்தும்.)

உள்ளே சென்ற காற்றை அசையாது நிறுத்தி குடற்று நீர்போல் உப்பியிருக்குமாறு செய்தல். கும்பகம்.

துருத்தியினின்று வெளியேறும் காற்றைப் போல். நாசியின் வழி காற்றை வெளியிடுதல் ரேசகம்.

இனி, இதன் முறையை ஆராய்வோம்:-வெளியே இருக்கின்ற காற்றை நமது நாசியில் பொருந்தி யிருக் கின்ற மூச்சுக் காற்றின் (அதாவது பிராணவாயுவின்) மூலமாக மெள்ள மெள்ள உள்ளே இழுத்து, ஹிரு

தயத்திலுள்ள எல்லா நாடிகளையும் நிரப்பவேண்டும் என்பது முதல் வேலை, அதற்குத்தான் பூரகம் அல்லது பெரிய காற்று அடக்கம் என்று பெயர்.

இனி கும்பகம் இரேசகம் ஆகிய இரண்டுக்கும் உள்ள விசேஷத்தை அத்திரிபகவான் கூறுகின்ருர்:-

நாம் சுவாஸத்தை அடக்கும்பொழுது, தலை ரோமம் முதல், கால் நுனி நகத்தின்வரை, அந்த சுவாஸம், நிரம்பி, அதன் சக்தி பரவும், உதாரணமாக: நாம் கும்பகம் செய்தவுடன் ஹிருதயத்தினின்று வாயு எழுகின்றது; அந்த வாயுவின் தாக்குதலிலிருந்து அக்னி (சூடு) உண்டாகின்றது. அக்னியினின்று ஜலம் உண்டாகின்றது. அவ்விதம் மூன்று பிராணு யாமம் செய்யின், இருதயத்தின் நாடிகள் யாவும் சுத்தம் பெறுகின்றன.

ஆனுல், ஒருமுறை கும்பகம் செய்தவுடன், ரேசகமும் செய்தல் முக்யமாகும், மெல்ல நாசியின் வழியே காற்றை வெளியிடல்தான் ரேசகம் எனப்படும். இவ்விதம் காற்றை உட்கொள்ளுதல். நிரப்புதல், வெளியிடுதல் ஆகிய மூன்றும் சேர்ந்ததுதான். ஒரு பிராணுயாமம் என்பது. இவ்வாறு மும்முறை செய்யின் ஹிருதய நாடி சுத்தியாகும்.

இவை செய்யும்பொழுது உடம்பு அசையக் கூடாது. அவ்வாறு செய்பவனே பிராணுயாம முறையறிந்த யோகியாவான்.

## பிராணுயாமம் செய்யும்பொழுது மனதில் எதைக் குறித்து-எவ்விதம் தியானம் செய்யவேண்டும்?

1. பூரகம் செய்யும்பொழுது தொப்புளின் மத்தியில். (நாபி கமலத்தில்) சிவப்பு நிறம்வாய்ந்த, பிரம்ம தேவரை த்யானம் செய்துகொள்ளவேண்டும்.

2. கும்பகம் செய்யும்பொழுது ஹிருதய கமலத்தில் ஸ்ரீமஹாவிஷ்ணு 'கருநெய்தல்', மலர் போன்ற நிறமுடையவராக விளங்குதல் போல் தியானிக்க வேண்டும்.

3. ரேசகம் செய்யும்பொழுது சிவபெருமான் நடு நெற்றியில் வெண்மை நிறம்வாய்ந்து விளங்குவது போல் த்யானம் செய்துகொள்ளவேண்டும்.

அவ்வித சிவசொரூபத்தை ஸ்ரீ வேதவியாஸ முனிவர் விளக்குகின்றூர்:-

"ரேசகம் மெதுவாக செய்யவேண்டும். அவ்வாறு செய்யும்பொழுது சுத்தமான படிக நிறம் போன்றும் அழுக்கற்றும், பாவத்தை நீக்கும் பரிசுத்த மேனிவாய்ந்தும், வெள்ளை வெளேறென்ற மேனிக்கொண்டும். முக்கண் பொருந்தியும் விளங்குகின்ற சிவபெருமானை தியானஞ்செய்யின், துன்பங்களினின்று விடுபடலாம்."

## இங்கு யோகி யாஜ்ஞவல்கியரின் கருத்து யாது?

பூரகம் விஷ்ணு சாயுஜ்யந்தரும்; கும்பகம் பிரம்ம தேவரை அடுத்துச் செல்விக்கும் ரேசகம் சிவபதம் தரும் [மனதில் அவ்விதத்தியானமும் பொருந்தி ஜபம் செய்தல் வேண்டும்.]

## பிராணுயாம லக்ஷணம் யாது?

நமது நாசியின் இடது நாடிக்கு இடா என்றும் வலது நாடிக்கு பிங்களா என்றும் பெயர். இவற்றை, முறையே சந்திர நாடி என்றும் சூரிய நாடி என்றும், கூறுவர் பெரியோர். இனி, இடையின் வழியாக 12 அங்குல காற்றை 12 எழுத்து உச்சரிக்கும் காலமாகிய 12 மாத்திரை காலம் வரை, மெல்ல இழுத்து வயிற்றை நிரப்பவேண்டும். அப்பொழுது இரு கண்களின் பார்வையும் நாசியின் நுனியை நோக்கிய வண்ணம் இருக்க வேண்டும்! அப்பால் பிங்களை என்ற சூரிய நாடியின் வழியாக அந்தக் காற்றை வெளியிட வேண்டும்.

## 'பிராணுயாமம்' என்ற சொல்லின் பொருளை நாரதர் விளக்குதல்.

பிராணன் என்ருல் உடம்பில் இருக்கின்ற வாயு என்று பொருள். அதை ஆயாமம் செய்தல் என்ருல் அடக்குதல் என்று தான் இங்கு பொருள் கொள்ள வேண்டும். அடக்கும்பொழுது அது தானே நாடிகளின் வழி நீண்டு கொள்ளுகின்றது!

## இந்த பிராணுயாமம் இரண்டுவிதம்தாஞ?

ஆம், ஏதேனும் ஒன்றை தியானம் செய்து கொண்டு, பிராணுயாமம் செய்யின், அது ஸகர்ப்பம் (உள் கருத்தோடு கூடியது). ஒன்றையும் நினையாமல் மூச்சை மட்டும் அடக்குதல் அகர்பம் (உள்ளே கருத்து இல்லாதது வெறும் மூச்சடக்கப் பயிற்சி!)

மனத்தை அடக்கி முன் தெரிவித்ததுபோல், மும்மூர்த்திகளை த்யானம் செய்தவண்ணம், 10 முறை பிராணுயாமம் புரிந்து, அதன்பிறகு காயத்ரீயை குறித்து ஜபம் செய்யவேண்டும். இது எல்லாப் பாவங்களையும் போக்கும் பரிசுத்த ஜப முறையாகும், என்பது ஸ்ரீ பாரத்வாஜர் கருத்து.

## பலவகை நலந்தரும் பிராயாணுமச் சிறப்பு

பிராணுயாமத்தை குறித்து சுருக்கமாக பெரியோர் தெரிவித்த கருத்தை முன்னர் கவனித்தோம். இனி, இதன் சிறந்த குணங்களை ஆராய்வோம்.

1. பிராணுயாமம் செய்து வருவோர்க்கு, ஆயுள் வளரும். உதாரணமாக; மனிதர் தினந்தோறும் 21,600 சுவாசம் விடுகின்றனர். அதில் மனிதர்களின் அறியாமை காரணமாக பல தகாத செயல்கள் குறுக்கிட்டு, 21600 சுவாஸத்தோடு நூருண்டு வாழவேண்டிய மனிதர்கள் அற்பாயுளில் மறைகின்றனர்! ஆனுல் பிராணுயாமம் முறையாக செய்து வருகின்றனவர்கள் ஆயுள் நிரம்பபெற்று வளருதல் கண் கூடு! நிற்கும் பொழுதும். நடக்கும்பொழுதும் சுவாசத்தை உள்ளுக்கிழுத்தே பழகுவோன், 60 வருஷப் பயிற்சியினுல், 'ஆயிரம் ஆண்டு வாழ்வான்' என்பது ஒரு யோகியரின் வாக்கு!

கச்சங் ஸ்திஷ்டன் ஸதா காலம் வாயு
ஸ்வீகரணம் பரம்,
ஷஷ்டிர் வர்ஷ ப்ரயத்நேந ஸஹஸ்ராயுர்
பவேந் நர

1. பிராணாயாமம், சுவாசகோசத்தை சுத்தம் செய்கிறது.

2. ஆரோக்கியத்தை அளிக்கின்றது

3. புதியகாற்று பிராணாயாமத்தால் ஹிருதயத்தினுள் செல்லும்தோறும் அவ்விடத்தில் அமைந்துள்ள நூற்றுக்கணக்கான நாடிக் கூட்டங்களில் நுழைந்து மிகமிக நுண்ணியநரம்புகளிலும் (இரத்ததாரைகளிலும்) புகுந்து சுத்தம் செய்து, உடலுக்கு உறுதியையும் அழகையும் அளிக்கின்றது.

4. பிராணாயாமம் ஞாபகசக்தியை வளர்க்கின்றது

5. பிராணாயாமம் மனக்கவலையை மாற்றுகின்றது.

6. பிராணாயாமம் கோழைத்தனத்தை போக்கி, தைரியத்தை தருகின்றது.

7. பிராணாயாமம் பலவித தீயகர்மங்களையும் வெல்லும் சக்தி வாய்ந்தது.

8. பிராணாயாமம் உடல் மனம் இரண்டுக்கும் உறுதியளிக்கின்றது. இதுபோன்ற பலவித நன்மைகளையும் அவரவர் அனுபோகத்தில் அறிந்து மகிழலாம்.

9. சிறுபருவம் முதல் செய்து வருவோருக்கு சிறந்த தீர்க்கதர்சன ஞானமும் உதயமாகும்.

10. மனம் ஒருமைப்படும்!

11. ஆண்டவன் அருளும் வாழ்வின் தொடரொளியாய் வந்துதவும்.

12. பிரம்மசரியத்தோடு பிராணுயாமமும் பயின்றுவரின், அனுமனைப்போல் ஆண்டவனுக்கு நேயத்தொண்டனுகி நீண்டநலம் எய்தலாம்!

சுபம்!

## ஸ்ரீகாயத்ரீ ந்யாஸ விதி ப்ரயோகம்

---

அஸ்யஸ்ரீ காயத்ரீ மந்த்ரஸ்ய; ப்ரஹ்மா ரிஷி:; தைவீ காயத்ரீ ச்சந்த:; காயத்ரீ ஸாவித்ரீ ஸரஸ்வத்யோதேவதா:; ஓம் பீஜம்; ஸ்வரா: சக்தய; பிந்தவ: கீலகம்; மமகாயத்ரீ ஸாவித்ரீ ஸரஸ்வதீ ப்ரஸாத ஸித்யர்த்தே ஜபே விநியோக:-

ஓம் தத்ஸவிது:- ப்ரஹ்மாத்மனே அங்குஷ்டாப்யாம்: நம: (இரு கட்டைவிரல் தொட்டு வந்தனம் செய்க)

2. வரேணியம்:—விஷ்ணவாத்மநே தர்ஜநீப்யாம் ஸ்வாஹா (ஆள்காட்டி விரல்களைத் தொட்டு செய்க)

3. பர்கோ தேவஸ்ய:—ருத்ராத்மநே மத்யமாப்யாம் வஷட் (இரு நடுவிரல்களால் செய்க)

4. தீமஹி :—ஸத்யாத்மநே அநாமிகாப்யாம் ஹூம் (இரு மோதிர விரலுக்கு உரியது)

5. தியோயோந:-ஜ்ஞாத்மநே கநிஷ்டிகாப்யாம் வௌஷட் (இரு சுண்டுவிரல்களால் செய்யத்தக்க நியாஸம் இது)

6. ப்ரசோதயாத்—பரமாத்மநே கர தலகர ப்ருஷ்டாப்யாம் பட் (இருகைகளின் மேற்புறத்தையும் தடவிக் கூறத்தக்கது இந்த மந்திரம்.

7. ஓம் தத்ஸவிது:- ப்ரஹ்மாத்மநே ஹ்ருதயாய நம; (ஹிருதயத்தைத் தொட்டு வந்தனம் பாவிக்க)

8. வரேணியம் - விஷ்ண்வாத்மநே சிரஸே ஸ்வாஹா [இருதயத்தில் தொட்டு, பாவனையோடு செய்க]

9. பர்கோ தேவஸ்ய - ருத்ராத்மநே சிகாயை வஷட் [சிகை - முடியில் செய்க]

10. தீமஹி - ஸத்யாத்மநே கவசாயஹூம் [புஜங்களைத் தொட்டு கவசம் போலும் பாவித்து, உச்சிரிக்குக]

11. தியோ யோந: ஜ்ஞாநாத்மநே நேத்ரத்ரயாய வௌஷட் [ஞானக்கண் உள் அடங்கிய இடமாகிய புருவநடுவில் தொட்டு செய்க]

12. ப்ரசோதயாத் - பரமாத்மநே அஸ்த்ராயபட் [கைகொண்டு சுடக்குக]

ஓம் பூர்ப்பூவ: ஸூவரோமிதி திக்பந்த;

[தலையைச் சுற்றி - திசைகளினின்றும் தனக்குத் தீங்கு வாராது பாதுகாத்துக்கொள்ளும் முறை இதுவாம்! இதன் செய்கை முறையை நேராக குருவின் வழி ஒரு முறை அறிந்து செய்துகொள்ளுதலே எளிதாம்]

## த்யானம் (செய்யும் முறை)

முக்தா வித்ரும ஹேம நீல தவள ச்சாயைர் முகைஸ் த்ரீக்ஷணைர் யுக்தாம் இந்து கலா நிபத்த ரத்ந மகுடாம் தத்வார்த்த வர்ணாத்மிகாம் காயத்ரீம் வரதா பயாங் குச கசா: சுப்ரம் கபாலம் கதாம் சங்கம் சக்ரம் அதாரவிந்த யுகளம் ஹஸ்தைர் வஹந்தீம் பஜே !!

"முத்துப்போன்று ஒளிரும் முகமொன்று; பவழம் போல் பிரகாசிக்கும் வதனமொன்று! பொன் போன்று பேரொளி பரப்பும் முகமொன்று; நீல வானத்தை நிகர்த்தவதனமொன்று; தூய வெள்ளைக் காந்தி வீசும் முகமொன்று!" என, இவ்வாறு ஐந்து முகமமைந்தவள் காயத்ரீ தேவியாம் அன்னை! அவளது கைகள் பத்திலும் அன்பரைக் காக்கவே ஆயுதங்கள் பத்து அமைந்துள்ளன! அவைகளால் அன்னை நமக் கறிவூட்டும் வகை யாது? முதலில் அத்தாய் நம்மை நோக்கி அருட்குறி தோன்ற விரும்பும் வரந்தருகின் றேன் அருகில் வா, என்ற ஜாடையோடும் அழைத்து, அப்பால், தனது இரண்டாங்கரத்தால் அஞ்சேல் என்று குறியிடவுஞ் செய்கின்ருள்! மூன்ருங்கரத் திலுள்ள அங்குசம் [ஈட்டி அவளது அடியார்களை அன்போடு அவள் அடக்கி யாளுந் திறனைக்காட்டும்! அப்பால், அவளது அன்பரின் பகைவரை அவள் பாசங்கொண்டு கட்டிப் பிணிக்குங்லீலையை நான்காங் கரத்தாலும் நமக்கு உணர்த்துகின்ருள்! அம்மட்டோ? ஆக்கும் தொழிலையும் அளிக்கும் தொழிலையும் அவள் கை கொண்டிருப்பதுபோல் அழிக்கும் தொழிலும் அவள் கையிலுள்ளது என்பதை முறையே கமலங் களும் கதை சங்க சக்கரங்களும் கபாலமும் விளக்கு கின்றன! இத்தகைய ஆயுதங்களைத் தாங்கி வேண்டு வார்க்கு வேண்டிய் வரமளித்து, இகபர நல மெலாந்தந்து காக்கும் அந்த ஐந்து முகத் தேவியை, காலையும் மாலையும் கருத்தில் வைத்து, நண்பகலிலும் எனது ஹிருதயம் மலர மனமொழி மெய்களால் தியானித்து-துதித்து-வணங்கி வழிபடுவேன்! [வழி

படுவோம் வாரீர்]! என்ற சிறந்த கருத்தமைந்தது இந்த சாரதா தந்திர தியான வாக்கு!

## வரம் விரும்புவோர் வழிபடுவதற்குரிய மந்திர வழிகள் யாவை?

1. வித்தையில் வல்லமை பெற விரும்பின், வாக்பவ பீஜம் கொண்டு இருதய பூமியில் விதைக்குக

(கல்வியில் வல்லவனுவதைக் காணலாம்)

2. லக்ஷ்மீகடாக்ஷம் பெற விரும்புவோர் ஶ்ரீ பீஜத்தை கைக்கொள்ளுதல் முறை.

3. வசியத்தை விரும்பின், காம பீஜம் நலம்.

4. எல்லா வகை ஆசைகளும் நிறைவேற விரும்பினேர், மாயாபீஜத்தைச் சேர்த்து ஜபம் செய்க.

5. நீண்ட ஆயுளை விரும்புவோர் ம்ருத்யுஞ்ஜெய மந்திரமாகிய நாலு அக்ஷரத்தையும் சேர்த்து காயத்ரீ தேவியை வேண்டுக.

## காயத்ரீ ஹோமத்திற்குரிய த்ரவ்யங்களும் அவற்றின் பலன்களும்

1. பரதேவதைக்குப் பாலன்னம் பரமப்ரீதி: 2. பாவம் தீர எள்ளும் நன்று" 3. அருகின் புல் அதிக நலம் 4. பாலுள்ள மரக்குச்சிகள் பெரு வாழ்வை அளிப்பன.

இவற்ருல் ஹோமஞ் செய்வோர் 6-ம் மாதத்தில் மனம் விரும்பிய மகத்தான செல்வ வாழ்க்கையைச் சிறப்பாக அமையப்பெறுவர்.

[ஶ்ரீ காயத்ரீ கல்பம்]

சுபம்.

ஸ்ரீ:

# ஸந்த்யா - வந்தனம்

பூர்வ பாகம்

## 1. ஆசமனம்

அச்யுதாய நம: | அனந்தாய நம: | கோவிந்தாய நம: ||

ஸ்ரீ:

# ஸந்தியாவந்தனம்

பரப்பிரஹ்மஸ்வரூபிணியான பராசக்தியை இருதய ஆகாசத்திலும் பேராகாசத்திலும் அன்றுடம் உதித்து அஸ்தமிக்கும் சூரியனிடத்திலும் வந்தனம் செய்தல் ஸந்தியாவந்தனம். ஸந்தியாவந்தனம் செய்யாதவன் எக்கருமத்திற்கும் தகுதியில்லாதவன். பிறப்பிறப்புத் தீட்டுக் காலங்களிலும் பிராணயாம மின்றி மனத்தால் மந்திரங்களை உச்சரித்து ஸந்தியா வந்தனத்தை விட்டுவிடாமல் செய்ய வேண்டும்.

## (பூர்வ பாகம்)

பொழிப்புரை

1. ஆசமனம்-அச்சுதனுக்கு நமஸ்காரம். அனந்தனுக்கு நமஸ்காரம். கோவிந்தனுக்கு நமஸ்காரம்.

கேஶவ, நாராயண, மாதவ, கோவிந்த, விஷ்ணோ, மதுஸூதன, த்ரிவிக்ரம, வாமன, ஸ்ரீதர, ஹ்ருஷீகேஶ பத்மநாப, தாமோதர ||

## 2. கணபதி-த்யானம்

ஶுக்லாம்பரதரம் விஷ்ணும் ஶஶிவர்ணம் சதுர்ப்புஜம் | ப்ரஸன்ன - வதனம் த்யாயேத்-ஸர்வ - விக்னோப - ஶாந்தயே ||

கேசவா, நாராயணு, மாதவா, கோவிந்தா, விஷ்ணோ, மதுஸூதனு, த்ரிவிக்ரமா, வாமனு, ஸ்ரீதரா, ஹ்ருஷிகேசா, பத்மநாபா, தாமோதரா, உன்னை பன்னிரு திருநாமங்களால் போற்றி என் இந்திரியங்களனைத்துக்கும் ரக்ஷை இடுகின்றேன்.

2. கணபதி தியானம்—எங்கும் நிறைந்தவரும் (எனினும் அன்பர்க்குகந்த வடிவம் ஏற்பவரும்) வெண்மையான ஆடை உடுத்தவரும் நிலவு போன்ற ஒளியுள்ளவரும் நான்கு கைகளுள்ளவரும் ஆனந்தம் பொங்கும் முகமண்டலத்தை யுடையவரும் ஆகிய கணபதியை எல்லா இடையூறுகளும் விலகுவதற்காக தியானம் செய்யவேண்டும்.

### 3. ப்ராணுயாம:

ஓம் பூ: | ஓம் புவ: | ஓ ஸுவ: | ஓம் மஹ: |
ஓம் ஜன: | ஓம் தப: | ஓ ஸத்யம் ||
ஓம் தத் ஸவிதுர்-வரேண்யம்
பர்க்கோ தேவஸ்ய தீமஹி |
தியோ யோ ந: ப்ரசோதயாத் ||
ஓமாபோ ஜ்யோதீ ரஸோऽம்ருதம் ப்ரஹ்ம
பூர்ப்-புவஸ்-ஸுவ-ரோம் ||

3. பிராணுயாமம்—(மூச்சின் ஆட்சி): ஓங்காரமே பூலோகம், ஓங்காரமே புவர்லோகம், ஓங்காரமே ஸுவர்லோகம், ஓங்காரமே மஹர்லோகம், ஓங்காரமே ஜனலோகம், ஓங்காரமே தபோலோகம், ஓங்காரமே ஸத்தியலோகம், ஓங்காரப் பொருளான எந்தப் பரமாத்மா நம்முடைய புத்தி சக்திகளை தூண்டுகிருரோ அந்த அனைத்தையும் படைக்கிறவரான பகவன்

உடைய சிறந்த ஜோதி ஸ்வரூபத்தை தியானிப்போம். ஓங்காரமே ஜலமும் ஒளியும் ரஸம் பொருந்திய அன்னத்தையளிக்கும் பூமியும், உயிருக்கு ஆதாரமான வாயுவும், எங்கும் பரந்த ஆகாசமும். பூ: புவ: ஸுவ: என்ற வியாஹ்ருதிகள் குறிப்பிடும் மனம் புத்தி அஹங்காரம் என்ற தத்துவங்களும் ஓங்காரமே.

## 4. ஸங்கல்ப:

மமோபாத்த-ஸமஸ்த-துரித-க்ஷய-த்வாரா ஸ்ரீபரமேஶ்வர - ப்ரீத்யர்த்தம்[1] ப்ராத: ஸந்த்யா - முபாஸிஷ்யே || (மாத்யாஹ்நிகம் கரிஷ்யே || ஸாயம் ஸந்த்யா-முபா-ஸிஷ்யே || )

## 5. மார்ஜனம்

ஓம் ஸ்ரீகேஶவாய நம: ||

ஆபோ ஹி ஷ்டா மயோ புவ: (1) தா ந ஊர்ஜே ததாதன (2) மஹே ரணாய சக்ஷஸே (3) யோ வ: ஶிவதமோ ரஸ: (4) தஸ்ய பாஜயதேஹ ந: (5) உஶதீரிவ

4. ஸங்கல்பம்—(தெளிந்த தீர்மானம்): என்னால் அடையப்பட்ட எல்லாப் பாவங்களையும் நசிக்கச் செய்வதின் மூலம் பகவானுடைய அருளுக்குப் பாத்திரமாகும் பொருட்டுக் காலையில் ஸந்தியாதேவியை உபாசிக்க ஆரம்பிக்கின்றேன்.

5. மார்ஜனம் — (புரோக்ஷணத்தால் மந்த்ரஸ்நானம்): ஓம் ஸ்ரீகேசவனுக்கு நமஸ்காரம். ஜல தேவதைகளாகிய நீங்கள் உயர்ந்த சுகத்துக்குக் காரணமாக இருக்கிறீர்கள் என்பது

---

1. ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாயம்—'ஸ்ரீபகவதாஜ்ஞயா, பகவத் ப்ரீத்-யர்த்தம்.'

மாதர: (6) தஸ்மா அரம் கமாம வ: (7) யஸ்ய க்ஷயாய ஜின்வத (8) ஆபோ ஜனயதா ச ந: (9) ஓம் பூர்ப் - புவஸ்-ஸவ: (10) (ஆத்ம-பரிஷேசனம்) ||

---

பிரசித்தம். அப்படிப்பட்ட நீங்கள் எங்களுக்கு மகிமை பொருந்தியதும் ரமணீயமானதுமான ஞானதிருஷ்டியின் பொருட்டுப் போஷணையை அளியுங்கள். உங்களிடம் எந்தப் பரம மங்களமான பேரின்பரஸம் உளதோ அதற்கு இங்கேயே எங்களை நீங்கள் அன்பு சுரக்கும் அன்னையைப்போல் உரியவர்களாக்குங்கள். எந்த ரஸத்தை நிலையாக வழங்கும் பொருட்டு நீங்கள் இன்பவடிவாய் விளங்குகிறீர்களோ அந்த ரஸத்திற்காக உங்களை மிகவும் ஆர்வத்துடன் நாடுகின்றோம். ஜலதேவதைகளாகிய நீங்கள் எங்களை ஞானத்தால் புனிதமான புனர்ஜன்ம மடைந்து விளங்கும்படியும் அருள்வீர்களாக.

1. ரிக்வேதிகளுக்கும் இதுவே மந்திரம். ஸாமவேதிகளுக்கும் காலையிலும் மாலையிலும் இதுவே மந்திரம்; பகலில் பின்வருமாறு கூட்டிக்கொள்ள வேண்டும்.

. தரத்ஸமேத்-யேதேஷாம் வாமதேவரிஷி:, காயத்ரீச் சந்த:, ஸோமோ தேவதா ||

ஓம் தரத்ஸ மந்தீ தாவதி | தாரா ஸுதஸ்யரந்தஸ: | தரத்ஸ மந்தீ தாவதி || உஸ்ரா வேத வஸூநாம் | மர்த்தஸ்ய தேவ்யவஸ:: | தரத்ஸ மந்தீ தாவதி || த்வஸ்ரயோ: புருஷந்த்யோ: | ஆ ஸஹஸ்ராணி - தத்மஹே | தரத்ஸமந்தீ தாவதி || ஆ யயோ ஸ்த்ரிம்ஸதம் தநா | ஸஹஸ்ராணி ச தத்மஹே | தரத் ஸமந்தீ தாவதி ||

ஆபோஹிஷ்டா .... ஜநயதா ச ந: || ஓம் பூர்ப்-புவஸ்-ஸுவ: ||

## 6. ப்ராசனம்

(ப்ராத:) ஸூர்யஸ்ச மா மன்யுஸ்ச மன்யுபத யஸ்ச மன்யுக்ருதேப்ய: | பாபேப்யோ ரக்ஷந்தாம் | யத்ராத்ர்யா பாப-மகார்ஷம் | மனஸா வாசா ஹஸ் தாப்யாம் | பத்ப்யா - முதரேண ஶிஸ்ஞா | ராத்ரிஸ் - ததவலும்பது | யத்கிஞ்ச துரிதம் மயி | இதமஹம் மாமம்ருத — யோநௌ | ஸூர்யே ஜ்யோதிஷி ஜுஹோமி ஸ்வாஹா || 6. 1 || [1]

6. ப்ராசனம்—(மந்திரத்தால் ஜபிக்கப்பட்ட தீர்த்தத்தை உட்கொள்ளுதல்).

(6. 1.) காலையில்—அனைத்தையும் இயக்குவிக்கும் சூரியனும் அனைவரையும் அடிமைகொள்ளும் கோபமும் கோபத்தையாளும் தெய்வசக்திகளும் கோபத்தாற் செய்யப்பட்ட பாவங்களினின்று என்னை காப்பாற்றட்டும். இரவில் மனத்தாலும் வாக்காலும் கைகளாலும் கால்களாலும் வயிற்றாலும் ஆண் குறியாலும் எந்தப் பாபத்தை செய்தேனோ, இன்னும் என்னிடத்தில் வேறு என்ன பாவம் உண்டோ அதையும், இராத்திரியின் அதி தேவதை நீக்கியருள வேண்டும். இங்ஙனம் பாவம் நீங்கிய என்னை நான் மோக்ஷத்திற்குக் காரணமாகிய சூரிய வடிவான பரஞ்ஜோதியில் ஹோமம்செய்கின்றேன். இந்த ஹோமம் நன்கு அனுஷ்டிக்கப்பட்டதாக வேண்டும்.

---

1. இம்மந்திரம் ரிக்வேதிகளுக்கும் யஜுர்வேதிகளுக்கும் பொது. ஸாமவேதிகளுக்கு: 'அஹஶ்ச மா ஆதித்யஶ்ச புநாது ஸ்வாஹா' ||

(மத்யாஹ்னே) ஆப: புனந்து ப்ருதிவீம் ப்ருதிவீ பூதா புனாது மாம் | புனந்து ப்ரஹ்மணஸ்பதிர்-ப்ரஹ்ம பூதா பூனாது மாம் | யதுச்சிஷ்ட - மபோஜ்யம் யத்வா துஶ்-சரிதம் மம | ஸர்வம் புனந்து மாமாபோ ஸதாஞ்ச ப்ரதிக்ரஹ || ஸ்வாஹா || 6. 2 || [1]

(ஸாயங்காலே) அக்னிஶ்ச மா மன்யுஶ்ச மன்யுபதயஶ்ச மன்யு-க்ருதேப்ய: | பாபேப்யோ ரக்ஷந்தாம் | யதஹ்னா பாப-மகார்ஷம் | மனஸா வாசா ஹஸ்தாப்யாம்.

(6. 2) நடுப்பகலில்—ஜலதேவதை தனக்குறைவிடமாகிய பூமியைப் புனிதமாக்கட்டும்; அங்ஙனம் புனிதமாக்கப்பட்ட பூமி என்னைப் புனிதமாக்கட்டும். அது வேதத்திற் குறைவிடமாகிய ஆசாரியனையும் புனிதமாக்கட்டும். என்றும் புனிதமாயுள்ள வேதம் என்னைப் புனிதமாக்கட்டும். பிறர் உண்ட மிச்சமும் புசிக்கத் தகாததும் புசிக்கப்பட்டதாலும், துர்நடத்தையாலும், கெட்டவர்களிடமிருந்து தானம் வாங்கியதாலும் உதித்த பாவங்கள் எல்லாவற்றினின்றும் என்னை ஜலதேவதை புனித மாக்கட்டும் (என்று பிரார்த்தித்துப் புனிதமான) என்னைப் பரமாத்ம ஜோதியில் ஹோமம் செய்கின்றேன்.

(6. 3) ஸாயங்காலத்தில்—அக்கினியும் அனைவரையும் அடிமைகொள்ளும் கோபமும் கோபத்தையாளும் தெய்வ சக்திகளும் கோபத்தாற் செய்யப்பட்ட பாவங்களினின்று என்னைக் காப்பாற்றட்டும்.

---

1. இம்மந்திரம் ரிக் - யஜுஸ் - ஸாமவேதிகளுக்கும் பொது.

பத்ப்யா-முதரேண ஶிஶ்ஞ | அஹஸ்ததவலும்பது | யத்கிஞ்ச துரிதம் மயி | இதமஹம் மா-மம்ருத-யோனௌ | ஸத்யே ஜ்யோதிஷி ஜுஹோமி ஸ்வாஹா ॥ 6. 3 ॥ [1]

## 7. புனர்மார்ஜனம்

(ஆசமனம் ॥ மார்ஜனம் ॥ ) ததிக்ராவ்ண்ணோ அகாரி-ஷம் | ஜிஷ்ணோ-ரஶ்வஶ்ய வாஜிந: | ஸுரபி நோ முகா-கரத் | ப்ரண ஆயுஷி தாரிஷத்=ஆபோ -

---

பகலில், மனத்தாலும் வாக்காலும் கைகளாலும் கால்களாலும் வயிற்ருலும் ஆண் குறியாலும் எந்தப் பாவத்தை செய்தேனே, இன்னும் என்னிடத்தில் வேறு என்ன பாவம் உண்டோ அதையும், பகலின் அதிதேவதை நீக்கியருள வேண்டும். இங்ஙனம் பாவம் நீங்கிய என்னை நான் மோக்ஷத்திற்குக் காரணமாகியதும் முக்காலத்தும் ஸத்தியமாய் விளங்குவதுமாகிய பரஞ்ஜோதியில் ஹோமம் செய்கின்றேன். இந்த ஹோமம் நன்கு அனுஷ்டிக்கப்பட்டதாக ஆக வேண்டும்.

7. புனர்மார்ஜனம்—(மீ ண் டு ம் புரோக்ஷணத்தால் மந்தர ஸ்நானம்): அனைத்துலகையுந் தாங்குபவனும் ஆள்பவனும் அளப்பவனும் ஜயசீலனும ஸகல வித்தைகளுக்கும் ஆதாரமான ஹயக்ரீவ வடிவமெடுத்தவனும் வேகவானுமாகிய பரமபுருஷனுக்கு வந்தனம்

1. ஸாமவேதிகளுக்கு: ராத்ரிஶ்ச மா வருணஶ்ச புனாது ஸ்வாஹா ॥

ஹிஷ்டா மயோ புவ: | த்ா ந ஊர்ஜே ததாதந | மஹே ரணாய சக்ஷஸே யோ வ: ஶிவதமோ ரஸ: | தஸ்ய பாஜயதேஹ ந: | உஶதீரிவ மாதர: | தஸ்மா அரங்க மாம வ: || யஸ்ய க்ஷயாய ஜின்வத | ஆபோ ஜனயதா ச ந: || ஓம் பூர்ப்-புவஸ்ஸுவ: || (ஆத்ம-பரிஷேசனம்) ||

## 8. அர்க்ய-ப்ரதானம்

ஓம் புர்ப்புவஸ்ஸுவ: | தத் ஸவிதுர்-வரேண்யம் பர்க்கோ தேவஸ்ய தீமஹி | தியோ யோ ந: ப்ரசோதயாத் || (ப்ராத: — 3 || மத்யாஹ்னே — 2 || ஸாயம் — 3 || )

---

செய்கின்றேன். நம்முடைய முகத்தையும் மற்ற இந்திரியங்களையும் நன்மணம் உடையவைகளாக அவர் செய்தருள வேண்டும். நம்முடைய ஆயுளை இடையூறு இல்லாமற் காக்கவேண்டும். ஜல தேவதைகள் .... நம்மை ஞானத்தால் புனிதமான புனர் ஜன்மம் அடைந்து விளங்கும்படி அருள்புரிய வேண்டும்.

8. அர்க்கியப் பிரதானம்—(அர்க்கியம் விடுதல்): ஓங்காரப் பொருளான பகவானே பூலோகமும் புவர்லோகமும் ஸுவர்லோகமும். எந்தப் பரமாத்மா நம்முடைய புத்தி சக்திகளைத் தூண்டுகிருரோ அந்த அனைத்தையும் படைக்கிறவரான பகவானுடைய சிறந்த ஜோதிஸ்வரூபத்தை தியானிப்போம். (காலையில் 3; மத்தியானத்தில் 2; மாலையில் 3,)

## 9. ப்ராயச்சித்தார்க்யம்[1]

(ப்ராணாயாம: || ) ஓம் பூ: + பூர்ப்-புவஸ்-ஸுவ ரோம் ||

(அர்க்யம் || ) ஓம் பூர்ப்புவஸ்ஸுவ: + தியோ யோ ந: ப்ரசோதயாத் ||

ஓம் பூர்ப்புவஸ்ஸுவ: || (ஆத்ம ப்ரதக்ஷிணம் பரிஷேச-னஞ்ச) ||

---

9. பிராயாச்சித்தார்க்கியம் (காலந்தவறிய குறை நீங்க மீண்டும் ஒரு அர்க்கியம்): பிராணாயாமம் —ஓங்காரமே பூலோகமும் புவர்லோகமும் ஸுவர் லோகமும் . . . . . ப்ரஞ்ஜோதி ஸ்வரூபத்தை தியா னிப்போம்.

அர்க்கியம்—முன்போல் ஒரு தடவை. 'ஓம் பூர்ப்புவஸ்ஸுவ:' என்று ஆத்மப் பிரதக்ஷிணமும் பரிஷேசனமும்.

1. பிராயச்சித்தார்க்யம் — ரிக்வேதிகளுக்கும் ஸாம வேதிகளுக்கும் : (காலையில்) ஓம், யதத்ய கச்ச வ்ருத்ர-ஹன் | உதகா அபிஸூர்ய | ஸர்வம் ததிந்த்ரதே வஸே ||

(பகலில்) ஓம், உத்தேதபி ஶ்ருதாமகம் | வ்ருஷபம் நர்யாபஸம் | அஸ்-தாரமேஷி ஸூர்ய ||

(மாலையில் ஓம், ந தஸ்ய மாயயாசந | ரிபுரீஸீத மர்த்ய: | யோ அக்னயே ததாச ஹவ்யதாதயே || (ஹவ்ய தாதிபி:—என்று முடிவு ரிக்வேதிகளுக்கு).

## 10. ஐக்யானுஸந்தானம்

அஸாவாதித்யோ ப்ரஹ்ம | ப்ரஹ்மைவாஹமஸ்மி || (த்யானம் || ஆசமனம் || )

## 11. தேவ-தர்ப்பணம்

ஆதித்யம் தர்ப்பயாமி | ஸோமம் தர்ப்பயாமி | அங்காரகம் தர்ப்பயாமி | புதம் தர்ப்பயாமி | ப்ருஹஸ்பதிம் தர்ப்பயாமி | ஶுக்ரம் தர்ப்பயாமி | ஶனைஶ்சரம் தர்ப்பயாமி | ராஹும் தர்ப்பயாமி | கேதும் தர்ப்பயாமி ||

---

**10.** ஐக்கியானுஸந்தானம்—(ஜீவாத்மபரமாத்ம ஒற்றுமையைச் சிந்தித்தல்): இந்த சூரியன் பிரம்மம். நானும் பிரம்மமாகவே இருக்கிறேன். (இங்ஙனம் தியானித்துப் பின் ஆசமனம் செய்க).

**11.** தேவதர்ப்பணம்—சூரியனை, சந்திரனை, செவ்வாயை, புதனை, குருவை, சுக்கிரனை, மெதுவாய்ச் செல்லும் சனியை, ராகுவை, கேதுவை—கால ரூபிகளான நவக்கிரக தேவதைகள் எல்லோரையும் திருப்தி செய்விக்கின்றேன்.

கேசவம் தர்ப்பயாமி | நாராயணம் தர்ப்பயாமி | மாதவம் தர்ப்பயாமி | கோவிந்தம் தர்ப்பயாமி | விஷ்ணும் தர்ப்பயாமி | மதுஸூதனம் தர்ப்பயாமி | த்ரிவிக்ரமம் தர்ப்பயாமி | வாமனம் தர்ப்பயாமி | ஶ்ரீதரம்

தர்ப்பயாமி | ஹ்ருஷீகேஶம் தர்ப்பயாமி | பத்மநாபம் தர்ப்பயாமி | தாமோதரம் தர்ப்பயாமி || (ஆசமனம் || )

இதி ஸந்த்யாவந்தன-பூர்வபாக:

---

கேசவனை, நாராயணனை, மாதவனை, கோவிந்தனை, விஷ்ணுவை, மதுஸூதனனை, திரிவிக்ரமனை, வாமனனை, ஸ்ரீதரனை, ஹ்ருஷீகேசனை, பத்மநாபனை, தாமோதரனை—பன்னிரு நாமங்களால் வரிசையாக மார்கழி முதல் கார்த்திகை வரையுள்ள பன்னிரண்டு மாதங்களுக்கும் அதிதேவதையாகவும் காலரூபியாகவும் விளங்கும் நாராயணனைத் திருப்திசெய்விக்கின்றேன். (ஆசமனம்).

இங்ஙனம் ஸந்தியாவந்தன பூர்வபாகத்திற்குப் பொழிப்புரை முற்றிற்று

## ஸந்த்யா-வந்தனம்

உத்தரபாக :

### 12. ஜபஸங்கல்ப:

சுக்லாம்பரதரம் விஷ்ணும் ஶசிவர்ணம் சதுர்ப்-புஜம் | ப்ரஸன்ன-வதனம் த்யாயேத் ஸர்வ-விக்னோப-சாந்தயே ||

## ஸந்தியாவந்தனம்

(உத்தர பாகம்)

### பொழிப்புரை

**12.** ஜபஸங்கல்பம்—(ஜபம் செய்வதற்குத் தெளிந்த தீர்மானம்): கணபதி தியானம்—எங்கும் நிறைந்தவரும் வெண்மையான ஆடை உடுத்தவரும்,

நிலவு போன்ற ஒளியுள்ளவரும், நான்கு கைகளுள்ள வரும், ஆனந்தம் பொங்கும் முகமண்டலத்தையுடைய வரும் ஆகிய கணபதியை எல்லா இடையூறுகளும் விலகுவதற்காக தியானம் செய்யவேண்டும்.

ஓம் பூ: + பூர்ப்புவஸ்ஸுவரோம் || (ப்ராணு யாம:) மமோபாத்த—ஸமஸ்த—துரிதக்ஷய—த்வாரா ஸ்ரீ பரமேச்வர-ப்ரீயத்யர்த்தம் ப்ராத:-ஸந்த்யா-காயத்ரீ-மஹா மந்த்ர ஜபம் கரிஷ்யே | (மாத்யாஹ்னிக-காயத்ரீ-மஹாமந்த்ர ஜபம் கரிஷ்யே) | (ஸாயம்-ஸந்த்யா-காயத்ரீ மஹாமந்த்ர ஜபம் கரிஷ்யே) ||

### 13. ப்ரணவஜப:-ப்ராணுயாம:

ப்ரணவஸ்ய ருஷிர்-ப்ரஹ்ம, தேவீ-காயத்ரீச்சந்த:, பரமாத்மா தேவதா ||

---

பிராணுயாமம்—ஓங்காரமே பூலோகம் முதலிய எல்லா உலகங்களும், எல்லா தத்துவங்களும்.

ஸங்கல்பம்—என்னுல் அடையப்பட்ட எல்லா பாவங்களேயும் நசிக்கச் செய்வதின் மூலம் பகவானுடைய அருளுக்குப் பாத்திரமாகும் பொருட்டு காயத்ரீ மகாமந்திர ஜபம் செய்ய ஆரம்பிக்கின்றேன்.

13. ப்ரணவஜப:—ப்ராணுயாம: (பிரணவ ஜபமும் பிராணுயாமமும்) — ஓங்காரத்திற்கு பிரம்மாவே ரிஷி; தேவீ கயாத்ரீ சந்தம்; பரமாத்மா தேவதை.

பூராதி-ஸப்த-வ்யாஹ்ருதீனும் அத்ரி-ப்ருகு-குத்ஸ-வஸிஷ்ட - கௌதம - காச்யப - ஆங்கிரஸ - ருஷய: || காயத்ரீ-உஷ்ணிக்-அனுஷ்டுப்- ப்ருஹதீ-பங்க்தீ-த்ருஷ்டுப்-ஜகதீ-ச்சந்தாம்ஸி || அக்னி-வாயு-அர்க்க-வாகீச-வருண-இந்த்ர-விச்வே தேவா-தேவதா: || **13.1** ||

ஓம் பூ: | ஓம் புவ: | ஓம் ஸுவ: | ஓம் மஹ: |
ஓம்ஜந: | ஓம் தப: | ஓம் ஸத்யம் ||

ஓம் தத் ஸவிதுர்-வரேண்யம் பர்க்கோ தேவஸ்ய தீமஹி | தியோ யோ ந: ப்ரசோதயாத் ||

ஓமாபோ ஜ்யோதீ ரஸோமம்ருதம் ப்ரஹ்ம பூர்ப்-புவஸ்ஸுவரோம் || **13.3** ||

---

**(13.1)** 'பூ:, முதலிய ஏழு வியாஹிருதிகளுக்கும் முறையே அத்ரி, பிருகு, குத்ஸர், வசிஷ்டர், கௌதமர், காசியபர், ஆங்கிரஸர், ரிஷிகள், காயத்ரி, உஷ்ணிக், அனுஷ்டுப், ப்ருஹதீ, பங்க்தீ, த்ருஷ்டுப், ஜகதீ என்பவை சந்தங்கள். அக்னி, வாயு, சூரியன், பிருஹஸ்பதி, வருணன், இந்திரன், விசுவே தேவர்கள் முறையே தேவதைகள்.

**(13.2)** ஓங்காரமே பூலோகம், ஓங்காரமே புவர் லோகம், ஓங்காரமே ஸுவர்லோகம், ஓங்காரமே மஹர்லோகம், ஓங்காரமே தபோலோகம், ஓங்காரமே ஸத்தியலோகம். ஓங்காரப் பொருளான எந்தப் பரமாத்மா நம்முடைய புத்தி சக்திகளைத் தூண்டுகிறாரோ அந்த அனைத்தையும் படைக்கிறவரான பகவானுடைய சிறந்த ஜோதி ஸ்வரூபத்தை தியானிப்போம்.

## 14. காயத்ரீ-ஆவாஹனம்

ஆயாத்வித்யனுவாகஸ்ய, வாமதேவ ருஷி: | அனுஷ்டுப் சந்த: | காயத்ரீ தேவதா ||

ஆயாது வரதா தேவீ அக்ஷரம் ப்ரஹ்ம ஸம்மிதம் | காயத்ரீம் சந்தஸாம் மாதேதம் ப்ரஹ்ம ஜுஷஸ்வ ந: || ஓஜோऽஸி ஸஹோऽஸி பலமஸி ப்ராஜோऽஸி தேவானும் தாம நாமாஸி விஶ்மஸி விஶ்வாயு: ஸர்வமஸி ஸர்வாயு-ரபி—பூரோம் காயத்ரீ -

---

(13.3) ஓங்காரமே ஜலமும், ஒளியும், ரஸம் பொருந்திய அன்னத்தை யளிக்கும் பூமியும், உயிருக்கு ஆதாரமான வாயுவும், எங்கும் பரந்த ஆகாசமும். பூ: புவ: ஸுவ: என்ற வியாஹ்ருதிகள் குறிப்பிடும் மனம், புத்தி, அஹங்காரம் என்ற தத்துவங்களும் ஓங்காரமே.

(14.1) காயத்ரீ ஆவாஹனம்: (காயத்ரீ தேவியை எழுந்தருளப் பிரார்த்தித்தல்)—'ஆயாது' எனும் அனுவாகத்திற்கு வாமதேவர் ரிஷி, அனுஷ்டுப் சந்தம், காயத்ரீ தேவதை.

விரும்பிய வரன்களை அளிப்பவளும் அழிவற்றவளும் வேதத்தால் அறியப்பட்டவளும் வேதமாதாவும் ஆகிய காயத்ரீ தேவி எழுந்தருளி இந்த வேத மந்திரஸ்துதியை அங்கீகரிக்கவேண்டும்.

காயத்ரியே! நீயே பிராணசக்தியாகவும் இந்திரிய சக்தியாகவும் இருக்கிறாய்; சத்துருக்களை வெல்லுந் திறமையாக இருக்கிறாய்; அங்கங்களின் வலிமையாக

மாவாஹயாமி, ஸாவித்ரீ - மாவாஹயாமி, ஸரஸ்வதீ - மாவாஹயாமி || 14. 1 ||

காயத்ரீ ந்யாஸ:—ஸாவித்ர்யா ருஷிர்-விஶ்வாமித்ர: | நிச்ருத் காயத்ரீச் சந்த : | ஸவிதா தேவதா || 14. 2 ||

## 15. காயத்ரீ ஜபம்

ஓம் | பூர்ப்புவஸ்ஸுவ: | தத்ஸவிதுர்வரேண்யம் | பர்க்கோ தேவஸ்ய தீமஹி | தியோயோ ந: ப்ரசோதயாத் ||

---

இருக்கிருய்; ஞான ஒளியாக இருக்கிருய்; தேவர்களுடைய பிரசித்தமான பிரகாசவடிவாயிருக்கிருய்; உலக வடிவாயிருக்கிருய்; காலரூபியாக உலகின் ஆயுளாகவும் இருக்கிருய்;எல்லாமாயிருக்கிருய்;எல்லோருடைய ஆயுளாகவும் இருக்கிருய்;அனைத்தையும்வென்றவளாயும் இருக்கிருய்; பிரணவப் பொருளான காயத்ரியே! உன்னை எழுந்தருளப் பிரார்த்திக்கின்றேன். ஸாவித்ரியே! உன்னை எழுந்தருளப் பிரார்த்திக்கின்றேன். ஸரஸ்வதியே! உன்னை எழுந்தருளப் பிரார்த்திக்கின்றேன்.

(14-2) காயத்ரீ நியாஸம்---காயத்ரீ மந்திரத்திற்கு விசுவாமித்திரர் ரிஷி, நிச்ருத் - காயத்ரீ எனும் சந்தம், ஸவிதா தேவதை.

15. காயத்ரீ ஜபம்—ஓங்காரப் பொருளான எந்தப் பரமாத்மா நம்முடைய புத்தி சக்திகளைத் தூண்டுகிருரோ அந்த அனைத்தையும் படைக்கிறவரான பகவானுடைய சிறந்த ஜோதிஸ்வரூபத்தைத் தியானிப்போம்.

## 16, காயத்ரீ-உபஸ்தானம்

ப்ராணுயாம:—ப்ராத: ஸந்த்யா, (ஆதித்ய), (ஸாயம் ஸந்த்யா), உபஸ்தானம் கரிஷ்யே ||

உத்தமே ஶிகரே தேவீ பூம்யாம் பர்வத-மூர்த்தனி | ப்ராஹ்மணேப்யோ ஹ்யனுஜ்ஞானம் கச்ச தேவி யதா ஸுகம் ||

## 17. ஸூர்ய-உபஸ்தானம்

ப்ராத:—மித்ரஸ்ய சர்ஷணீ த்ருத: ஶ்ரவோ தேவஸ்ய ஸாநஸிம் | ஸத்யம் சித்ர ஶ்ரவஸ்தமம் ||

மித்ரோ ஜனன் யாதயதி ப்ராஜானன் மித்ரோ தா-தார ப்ருதிவீ-முத த்யாம் | மித்ர: க்ருஷ்டீ-ரனிமிஷாபி-சஷ்டே ஸத்யாய ஹவ்யம் க்ருதவத்-விதேம ||

---

16. காயத்ரீ உபஸ்தானம்—(ஜபம் முடிந்ததும் காயத்ரியைத் துதித்து ஸ்வஸ்தானம் எழுந்தருளப் பிரார்த்தித்தல்). பிராணுயாமம் செய்து—காலை ஸந்தியோபஸ்தானத்தைச் செய்கிறேன். (நடுப்பகலில் ஆதித்ய உபஸ்தானம், மாலையில் ஸாயம் ஸந்த்யா உபஸ்தானம்). பிரகாசிக்கின்ற காயத்ரீ தேவியே, பூமியில் பிரம்மோபாஸனம் செய்கின்ற எங்களுக்கு அனுக்கிரகத்தைச் செய்து மேருமலையினுச்சியில் உத்தமமான சிகரத்திலுள்ள உனது ஆலயத்தில் ஆனந்தமாய் எழுந்தருள்வாய்.

(17.1) காலையில்—பிரஜைகளை இரக்ஷிக்கும் சூரியதேவனுடைய பஜிக்கத்தகுந்ததும் அழிவற்றதும் கேட்பவர் மனத்தைக் கவர்வதில் சிறந்ததுமான கீர்த்தியையும் பெருமையையும்—தியானிக்கின்றேன்.

ப்ரஸ மித்ர மர்த்தோ அஸ்து ப்ரயஸ்வான் யஸ்த ஆதித்ய ஶிக்ஷதி வ்ரதேன | ந ஹன்யதே ந ஜீயதே த்வோதோ நைநமம் ஹோ அஶ்னோத்-யந்திதோ ந தூராத் || 17.1 ||

---

சூரியன் அனைத்தையும் அறிந்து கொண்டு ஜனங்களை நடத்திவைக்கிறார். சூரியன் பூமியையும் மேலும் வானுலகையும் தாங்குகிறார். சூரியன் ஜீவராசிகளைக் கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருக்கிறார் அழியாத பலனைப் பெறுவதற்காக நெய் நிறைந்த ஹவிஸ்ஸை அளிக்கின்றோம்.

மித்திரரானசூரியபகவானே! எவன் நியமத்துடன் உம்மை ஆராதிக்க விரும்புகிறானோ அந்த மனிதன் பரிபூர்ணமான தர்மபலனுடன் கூடினவனாக ஆகட்டும். உம்மால் இரக்ஷிக்கப்பட்டவன் நோய் வாய்ப்பட்டு அழிவுறான்; இவனைப் பாவம் ஸமீபத்திலோ தூரத்திலோ துன்புறுத்தாது.

ரிக்வேதிகளுக்கு: காலையில்உபஸ்தானமந்திரம்—

மித்ரஸ்ய சர்ஷணீத்ருதோऽவோதேவஸ்ய ஸாநஸி— த்யும்னம் சித்ர—ஶ்ரவஸ்-தமம் | மித்ரோ ஜனான் யாதயதி ப்ருவாணோ மித்ரோ தாதார ப்ருதிவீ-முதத்யாம் | மித்ர: க்ருஷ்டீ-ரநிமிஷாऽபிசஷ்டே மித்ராய ஹவ்யம் க்ருதவஜ்-ஜுஹோத ॥ ப்ரஸமித்ர மர்த்தோ அஸ்து ப்ரயஸ்வான் யஸ்த ஆதித்ய ஶிக்ஷதி வ்ரதேந | ஹன்யதே ந ஜீயதே த்வோதோ நைநம் ஹோ அஶ்னோத்-யந்திதோந-தூராத் ॥

மத்யாஹ்னே—ஆஸத்யேன ரஜஸா வர்த்தமானோ நிவேசயன்-னம்ருதம் மர்த்யஞ்ச | ஹிரண்யயேன ஸவிதாரதேனாऽऽதேவோ யாதி புவனா விபஶ்யன் ||

உத்வயம் தமஸஸ்பரி பஶ்யந்தோ ஜ்யோதி-ருத்தரம் தேவந் தேவத்ரா ஸூர்ய-மகன்ம ஜ்யோதி-ருத்தமம் |

(17.2) நடுப்பகலில்—ஆன்ம ஜோதியாலும் கண் காணும் பிரகாசத்தாலும் தேவ உலகினரையும் மனித உலகினரையும் அவரவர் கருமங்களில் புகுத்திக்கொண்டு சுற்றி வருபவரான சூரியதேவன் பொன்மயமான தேரில் உலகங்களை நன்கு பார்வை யிட்டுக் கொண்டு சஞ்சரிக்கிறார்.

இருளை விழுங்கிக்கொண்டு உதிக்கின்ற உயர்ந்த ஜோதி வடிவினராயும் தேவர்களையும் இரக்ஷிக்கின்ற வராயும் உள்ள சூரியதேவனை பார்ப்பவர்களான நாம் உத்தமமான ஆன்ம

ஜாதவேதஸே ஸுநவாம ஸோம-மராதி யதோ நித ஹாதி வேத: | ஸ ந: பர்ஷததி துர்க்காணி விஶ்வா நாவேவ ஸிந்தும் துரிதாத்யக்னி: || பிஶங்க ப்ருஷ்டிமம் ப்ருணம் பிஶாசி-மிந்த்ர ஸம்-ம்ருண | ஸர்வம் ரக்ஷோ நிபர் ஹய || (முகத்தைச் சுற்றி) || பத்ரங் கர்ணேபி: ஶ்ருணுயாம தேவா: | பத்ரம் பஶ்யேமாக்ஷபிர்-யஜத்ரா: | ஸ்திரை - ரங்கைஸ் - துஷ்டுவாம் ஸஸ்தனூபி: | வ்யஶேம தேவஹிதம் யதாயு: || (காது) || கேஶ்யா அக்னிம் கேஶீ விஷம் கேஶீ பிபர்த்தி ரோதஸி | கேஶீ விச்வம் ஸ்வர்த் ருஶே கேஶீதம் ஜ்யோதி-ருச்யதே || (சிரஸ்) ||

ஸாமவேதிகளுக்கு : காலையில் உபஸ்தான மந்திரம்—

யஶோzஹம் பவாமி ப்ராஹ்மணானாம் யஶோ ராஜ்ஞாம் யஶோ விஶாம்: | யஶ: ஸத்யஸ்ய பவாமி | பவாமி யஶஸாம் யஶ: ||

ஆதித்ய நாவ-மாரோக்ஷம் பூர்ண-மபரிபாதினீம் | அச்சித்ராம் பாரயிஷ்ணவீம் ஶதாரத்ராம் ஸ்வஸ்தயே ஓம் நம ஆதித்யாய, நம ஆதித்யாய; நம ஆதித்யாய || உத்யந்தம் த்வாzzதித்யானுதீய ாஸம் ||

உதுத்யம் ஜாதவேதஸம் தேவம் வஹந்தி கேதவ: | த்ருஸே விச்வாய ஸூர்யம் ||

சித்ரந் தேவாநு - முதகா - தனீகம் சக்ஷுர்-மித்ரஸ்ய வருணஸ்யாக்னே: | ஆ ப்ரா த்யாவா ப்ருதிவீ அந்தரிக்ஷ ஸூர்ய ஆத்மா ஜகதஸ்-தஸ்துஷஸ்ச || தச்சக்ஷுர் - தேவ-ஹிதம் புரஸ்தாச் சுக்ர-முச்சரத் ||

---

ஜோதியையே அடைந்தவர்களாவோம். அந்தப் பிரசித்தமான அனைத்தையும் அறிகின்ற தேவனான சூரியனைக் கிரணங்களாகிற குதிரைகள் உலகோரின் தரிசனத்திற்காக உயரத்தாங்கிச் செல்கின்றன.

மித்திரனுக்கும் வருணனுக்கும் அக்கினிக்கும் கண் போன்றவரும் விசித்திரமான ஸர்வ தேவஸ்வரூபியும் ஆகிய சூரியன் உயரச் செல்லுகிறார். அசையும் பொருள்களுக்கும் அசையாப் பொருள்களுக்கும் ஆத்மாவாகிய சூரியன் தேவலோகம் பூலோகம் அந்தரிக்ஷம் அனைத்தையும் வியாபிக்கிறார். கிழக்கில் பரிசுத்தமாய் உதித்து தேவர்களுக்கு நன்மை செய்வதும் கண் போன்றதுமான அந்த சூரியமண்டலத்தை நூறாண்டு கண்டு வணங்குவோம்; அங்ஙனம் நூறாண்டு வாழ்வோம்; நூறாண்டு உற்றார் உறவினருடன் கூடிக்குலவுவோம்; நூறாண்டு மகிழ்வோம்; நூறாண்டு கீர்த்தியுடன் விளங்குவோம்; நூறாண்டு இனியதையே பேசுவோம்; நூறாண்டும் தீமைகளால் ஜயிக்கப் படாதவர்களாகவே வாழ்வோம். இங்ஙனம் நீண்ட காலம் சூரியதேவனைப் பார்த்து அனுபவிக்க ஆசைப்படுகின்றோம்.

**பஶ்யேம ஶரத: ஶதம், ஜீவேம ஶரத: ஶதம், நந்தாம ஶரத: ஶதம், மோதாம ஶரத: சதம், பவாம ஶரத: ஶத ஶ்ருணவாம ஶரத: ஶதம், ப்ரப்ரவாம ஶரத: ஶத-மஜீதாஸ்யாம ஶரத: ஶதம், ஜ்யோக்ச ஸூர்யந் த்ருஶே |**

ய உதகான் - மஹதோர்ணவாத் - விப்ராஜமான: ஸரிரஸ்ய மத்யாத் ஸமா வ்ருஷபோ லோஹிதாக்ஷஸ்-ஸூர்யோ விபஶ்சின்-மனஸா புநாது || 17.2 ||

**விரும்பிய பலனை யளிப்பவரும் சிவந்த கண்களை யுடைய வரும் எல்லா மறிந்தவருமான எவர் எத்திக்கிலும் பிரகாசிப்பவராய்ப் பெரிய ஸமுத்திரத்தின் ஜலமத்தியிலிருந்து காலையில் உதித்தாரோ அந்த சூரியதேவன் என்னை முழுமனத்துடன் புனிதனுக்கியருள்வாராக.**

---

**ரிக்வேதிகளுக்கு : நடுப்பகலில் உபஸ்தான மந்திரம்—**

ஆக்ருஷ்ணேந ரஜஸா வர்த்தமானோ நிவேஶயன்-னம்ருதம் மர்த்யஞ்ச | ஹிரண்யயேன ஸவிதா ரதேநா-தேவோயாதி புவனாநி பஶ்யன் || தச்சக்ஷுர்-தேவஹிதம் புரஸ்தாச் சுக்ர-முச்சரத் | பஶ்யேம ஶரத: ஶதம் | ஜீவேம ஶரத: ஶதம் || ஹஸ: சுசிஷத் வஸுரந்தரிக்ஷஸத் ஹோதா வேதிஷ-ததிதிர்-துரோண ஸத் | ந்ருஷத்வரஸத்-ருதஸத்-வ்யோமஸ-தப்ஜா கோஜா-ருதஜா அத்ரிஜா ருதம் ப்ருஹத் ||

உதுத்யம் ஜாதவேதஸம் தேவம் வஹந்தி கேதவ: | த்ருஶே விஶ்வாய ஸூர்யம் || அபத்யேதா யவோ யதா நக்ஷத்ராயந்த்யக்துபி: | ஸூராய விஶ்வ சக்ஷஸே ||

சித்ரந் தேவானு - முதகாதனீகம் சக்ஷுர் - மித்ரஸ்ய வருணஸ்யாக்னே: | ஆப்ரா த்யாவா ப்ருதிவீ அந்தரிக்ஷ ஸூர்ய ஆத்மா ஜகதஸ்-தஸ்துஷஶ்ச || தத் ஸூர்யஸ்ய தேவத்வம் தன் மஹித்வம் | மத்யா கர்த்தோர் விததம் ஸஞ்ஜபார || யதேத-யுக்த - ஹரிதஸ் ஸதஸ்தாத் | ஆதாத்ரீ வாஸஸ்தனு தேஸிமஸ்மை | தன் மித்ரஸ்ய வருணஸ்யாபிசக்ஷே | ஸூர்யோ ரூபம் க்ருணுதே த்யோருபஸ்தே ||

ஸாயங்காலே—இமம் மே வருண ஶ்ருதி ஹவ-மத்யா ச ம்ருடய | த்வாமவஸ்யு-ராசகே ||

தத் - த்வா யாமி ப்ரஹ்மணு வந்தமானஸ்-ததா ஶாஸ்தே யஜமானே ஹவிர்ப்பி: | அஹேடமானே வருணேஹ போத்யுருஶ ஸமாந ஆயு: ப்ரமோஷீ: ||

17.3 மாலையில்—வருணதேவரே, என்னுடைய இந்த வேண்டுதலைக் கேட்டருள்வீர், இப்பொழுதே இன்புறச் செய்வீர். ரக்ஷையை விரும்பி உம்மை பிரார்த்திக்கின்றேன்.

வேதமந்திரத்தால் ஸ்தோத்திரம் செய்து கொண்டு அதற்காகவே உம்மைச் சரணடை கின்றேன். யாகம் செய்பவன் ஹவிஸ் திரவியங்களைக் கொண்டு அதையே கோருகிறுன்.

---

ஸாமவேதிகளுக்கு: நடுப்பகலில் உபஸ்தான மந்திரம்-

ஆதித்ய நாவமாரோக்ஷம் பூர்ணு-மபரிபாதினீம் | அச்சித்திராம் பாரயிஷ்ணவீம் ஶதாரித்ராம் ஸ்வஸ்தயே || ஓம் நம ஆதித்யாய, நம ஆதித்யாய, நம ஆதித்யாய ||

உதுத்யம் ஜாதவேதஸம் தேவம் வஹந்தி கேதவ: | த்ருஶே விஶ்வாய ஸூர்யம் || சித்ரம் தேவானுமுதகாதனீகம் சக்ஷுர்-மித்ரஸ்ய வருணஸ்-யாக்னே: || ஆ ப்ரா த்யாவா ப்ருதிவீ அந்தரிக்ஷ ஸூர்ய ஆத்மா ஜகதஸ்-தஸ்துஷஶ்ச | தச்சக்ஷுர்-தேவஹிதம் புரஸ்தாச் சுக்ரமுச்ச சரத் ||

ஓம் பூர்ப்புவஸ்ஸுவரோம் | ஸூர்ய இவ த்ருஶே பூயாஸம், அக்னிரிவ தேஜஸா, வாயுரிவ ப்ராணேன, ஸோம இவ கந்தேன, ப்ருஹஸ்பதிரிவ புத்த்யா, அஶ்விநாவிவ ரூபேண; இந்த்ராக்னீ இவ பலேன, ப்ரஹ்மபாக ஏவாஹம் பூயாஸம், பாப்மபாகா மே த்விஷந்த: ||

யச்சித்திதே விஸோ யதா ப்ரதேவ வருண வ்ரதம் | மினீமஸி த்யவி த்யவி ||

புகழ்மிக்க வருணதேவரே, அநாதரவு செய்யாமல் இப்பொழுது என் பிரார்த்தனையை அங்கீகரிக்க வேண்டும். எமது ஆயுளைக் குறைத்து விடாதீர்.

வருணதேவரே, விவேகமற்ற மனிதர்களைப்போல் உம்முடைய ஆராதனையை தினந்தோறும் அனுஷ்டிக்காமல் அஜாக்கிரதையால் எதை விடுத்தோமோ;

---

ரிக்வேதிகளுக்கு: மாலையில் உபஸ்தான மந்திரம்—

இமம் மே வருண ஶ்ருதீ ஹவ - மத்யா ச ம்ருளய | த்வா-மவஸ்யு-ராசகே | தத்-த்வா யாமி ப்ர ஹ்மணா வந்த மானஸ்-ததாஶாஸ்தே யஜமானோ ஹவிர்ப்பி: | அஹேள மானோ வருணேஹ போத்யுருஶ ஸமாந ஆயு: ப்ரமோஷீ: | யச்சித்தி தே விஶோ யதா ப்ரதேவ வருண வ்ரதம் | மினீமஸி த்யவி த்யவி | யத்கிஞ்சேதம் வருணதைவ்யே ஜநேபித்ரோஹம் மனுஷ்யாஶ்-சராமஸி | அசித்தீ யத் தவ தர்மா யுயோபிம | மா நஸ்-தஸ்மா-தேனஸோ தேவரீரிஷ: | கிதவாஸோ யத்திரிபுர்-நதீவி யத்வாகா ஸத்ய-முதயந் ந வித்ம | ஸர்வாதா விஷ்ய ஶிதிரேவ தேவாதா தே ஸ்யாம வருண ப்ரியாஸ: ||

ஜாதவேதஸே ஸுநவாம ஸோம மாரதீயதோ நிதஹாதி வேத: | ஸ ந: பர்ஷததி துர்க்காணி விஶ்வா நாவேவ ஸிந்தும் துரிதாத்யக்னி: | பிஶங்க ப்ருஷ்டிமம் ப்ருணம் பிஶாசி-மிந்த்ர ஸம்-ம்ருண | ஸர்வம் ரக்ஷோ நிபர்ஹய || (முகத்தைச் சுற்றி) || பத்ரங் கர்ணேபி: ஶ்ருணுயாம தேவா: | பத்ரம் பஶ்யேமாக்ஷபிர்-யஜத்ரா: | ஸ்திரை-ரங்கைஸ்-துஷ்டுவா ஸஸ்தனூபி: | வ்யஶேம தேவஹிதம் யதாயு: || (காது) || கேஶ்யா அக்னிம் கேஶீ விஷம் கேஶீ பிபர்த்தி ரோதஸி | கேஶீ விச்வம் ஸ்வர்த்ருஶே கேஶீதம் ஜ்யோதி-ருச்யதே || (சிரஸ்).

யத்கிஞ்சேதம் வருணதைவ்யே ஜநே஽பித்ரோ மனுஷ்யாஸ்-சராமஸி | அசித்தீ-யத்-தவ தர்மா யுயோ பிமமா நஸ்தஸ்மா-தேன ஸோ தேவ ரீரிஷ: ||

கிதவாஸோ யத்-ரிரி-புர்-நதீவி யத்வாகா ஸத்ய-முதயந்-ந வித்ம | ஸர்வா தா விஷ்ய சிதிரேவ தேவாதாதே ஸ்யாம வருண ப்ரியாஸ: || 17.3 ||

---

ஸாமவேதிகளுக்கு: மாலையில் உபஸ்தான மந்திரம்—

யசோ஽ஹம் பவாமி ப்ராஹ்மணானாம் யசோ ராஜ்ஞாம் யசோ விஶாம் | யஶ: ஸத்யஸ்ய பவாமி | பவாமி யஶஸாம் | யஶ: ||

ஆதித்ய நாவ-மாரோக்ஷம் பூர்ணா-மபரிபாதினீம் | அச்சித்ராம் பாரயிஷ்ணவிம் சதாரித்ராம் ஸ்வஸ்தயே | ஓம் நம ஆதித்யாய, நம ஆதித்யாய, நம ஆதித்யாய || ப்ரதி-திஷ்டந்தம் தவா஽஽தித்யானு ப்ரதிதிஷ்டாஸம் ||

வருணதேவரே, தேவதைகளின் சமூகத்திற்கு மனிதர்களாகிய நாங்கள் இவ்விதமான வஞ்சனை அறியாமையால் எதெது செய்துள்ளோமோ; உம்முடைய தருமத்தை, எதைக் கெடுத்தோமோ; வருணதேவரே அந்தப் பாவத்திற்காக எங்களை இம்சியாது காத்தருளல் வேண்டும்.

சூதாடிகளைப்போன்றவர்கள் நல்லோர் நாடாத இடத்தில் எந்தப் பழியை அநியாயமாக என்மீது சுமத்தினார்களோ அல்லது எந்தப் பாவம் உண்மையில் அறிந்து செய்யப்பட்டதோ மேலும் எதைச் செய்தும் அறியவில்லையோ அவையனைத்தையும் வலியின்றிச் சிதறிப் போமாறு நாசம் செய்யும் வருண தேவரே, பின்னர் உமக்குப் பிரியமானவர்களாக எப்போதும் இருக்கவேண்டும்.

## 18 ஸமஷ்ட்யாபிவாதனம்

ஸந்த்யாயை நம: | ஸாவித்ர்யை நம: | காயத்ர்யை நம: | ஸரஸ்வத்யை நம: | ஸர்வாப்யோ தேவதாப்யோ நமோ நம: | காமோऽகார்ஷீன்-மன்யு-ரகார்ஷீந் நமோ நம: || 18-1 ||

அபிவாதயே (வைச்வாமித்ர, ஆகமர்ஷண, கௌசிக, த்ரய-) ஆர்ஷேய ப்ரவரான்வித (கௌசிக) கோத்ர:,(ஆபஸ்தம்ப) ஸூத்ர: (யஜு:),ஸாகாத்யாயீ, ஸ்ரீ(க்ருஷ்ண)ஸர்மா நாமாஹம் அஸ்மி போ: || 18-2 ||

---

**18.** ஸமஷ்டி-அபிவாதனம்—ஸந்தியா தேவிக்கு நமஸ்காரம், ஸாவித்ரீ தேவிக்கு நமஸ்காரம், காயத்ரி தேவிக்கு நமஸ்காரம். ஸரஸ்வதீ தேவிக்கு நமஸ்காரம். எல்லாதேவதைகளுக்கும் மீண்டும் மீண்டும் நமஸ்காரம். காமமே செய்தது கோபமே செய்தது—நான் செய்த பாவமெதுவும் வேண்டு மென்று மனமொப்பிச் செய்ததன்று; காமக் குரோத வசத்தால் அறியாமல் நிகழ்ந்துவிட்டதால் பொருத்தருளவேண்டும். தேவர்களே! உங்களைப் பன்முறை வணங்குகின்றேன்.

ஸர்வ தேவதேவிஸ்வரூபியான பகவதி! உனது பாதகமலங்களில் வணங்குகின்றேன். (விசுவாமித்ரர், அகமர்ஷண, கௌசிகர் என்ற மூன்று) ரிஷிகளை கோத்ரப் பிரவரத்தர்களாயுடைய (கௌசிக) கோத்ரத்திற் பிறந்தவனும், ஆபஸ்தம்ப ஸூத்திரத்தின்படி கருமங்களை யனுஷ்டிப்பவனும் யஜுர் வேதத்தை அத்தியயனம் செய்பவனும் ஸ்ரீ (கிருஷ்ண) சர்மா என்றபெயரை உடையவனும் அடியேன்.

## முக்கியமான சில அபிவாதனப் ப்ரவரங்கள்

| | கோத்ரம் | ப்ரவரம் |
|---|---|---|
| 1 | ஆத்ரேய | ஆத்ரேய - ஆர்ச்சநாநஸ-ஸ்யாவாஸ்வ |
| 2 | நைத்ருவ - காச்யப | காச்யப - ஆவத்ஸார-நைத்ருவ |
| 3 | ரேப - காச்யப | காஸ்யப-ஆவத்ஸார-ரைப |
| 4 | சாண்டில்ய- காச்யப | காஸ்யப-ஆவத்ஸார-சாண்டில்ய |
| 5 | கார்க்கேய | ஆங்கீரஸ-ஸைன்ய-கார்க்ய<br>ஆங்கீரஸ-பார்ஹஸ்பத்ய-பாரத்வாஜ-ஸைன்ய-கார்க்ய |
| 6 | கௌண்டின்ய | வாஸிஷ்ட-மைத்ராவருண-கௌண்டிண்ய |
| 7 | கௌஸிக | வைஸ்வாமித்ர-ஆகமர்ஷமர்ஷண-கௌசிக |
| 8 | கௌதம | ஆங்கிரஸ-ஆயாஸ்ய- கௌதம |
| 9 | பாரத்வாஜ | ஆங்கீரஸ-பார் ஹஸ்பத்ய-பாரத்வாஜ |
| 10 | மௌத்கல்ய | ஆத்ரேய-ஆர்ச்சனைஸ-பௌர்வாதித<br>ஆங்கிரஸ-ஆம்பரீஷ-மௌத்கல்ய<br>ஆங்கீரஸ-பார்ம்யச்வ - மௌத்கல்ய |
| 11 | ஸாண்டில்ய | காஸ்யப-தைவல-அஸித |
| 12 | வாதூல | பார்க்கவ-வைதஹவ்ய-ஸாவேதஸ |
| 13 | ஸௌனக | கார்த்ஸமத |
| 14 | ஸ்ரீவத்ஸ | பார்க்கவ-ச்யாவன-ஆப்னவன ஔர்வ-ஜாமதக்னிய |
| 15 | ஷடமர்ஷண | ஆங்கிரஸ-த்ராஸதஸ்ய-பௌருகுத்ஸ |
| 16 | ஸங்க்ருதி | ஸாத்ய-ஸாங்க்ருத்ய-கௌரிவீத<br>ஆங்கீரஸ-ஸாங்க்ருத்ய-கௌரிவீத |
| 17 | ஹரித | ஆங்கீரஸ-அம்பரீஷ யௌவநாஸ்வ |
| 18 | பாதராயண | ஆங்கிரஸ-பௌருகுத்ஸ-த்ராஸதுஸ்ய |
| 19 | பௌருகுத்ஸ | ,, ,, ,, |

## 19. திக்தேவதா - வந்தனம்

ப்ராச்யை திஶே நம: | தக்ஷிணாயை திஶே நம: | ப்ரதீச்யை திஶே நம : | உதீச்யைதிஶே நம: | ஊர்த்வாய நம: | அதராய நம : | அந்தரிக்ஷாய நம: | பூம்யை நம : | ப்ரஹ்மணே நம : | விஷ்ணவே நம : | ம்ருத்யவே நம : |

## 20. யம வந்தனம்

யமாய நம : | யமாய தர்மராஜாய ம்ருத்யவே-சாந்த-காய ச | வைவஸ்வதாய காலாய ஸர்வபூதக்ஷயாய ச ||

---

19. திக்தேவதைகளின் வந்தனம்—கிழக்கு திக்கின் தேவதைக்கு நமஸ்காரம். தெற்கு திக்கின் தேவதைக்கு நமஸ்காரம். மேற்கு திக்கின் தேவதைக்கு நமஸ்காரம். வடக்கு திக்கின் தேவதைக்கு நமஸ்காரம். மேல் உள்ள தேவதைகட்கு நமஸ்காரம். கீழ் உள்ள தேவதைகட்கு நமஸ்காரம். இடையிலுள்ள தேவதைகட்கு நமஸ்காரம். பூதேவிக்கு நமஸ்காரம். பிரம்மாவுக்கு நமஸ்காரம். விஷ்ணுவுக்கு நமஸ்காரம். ருத்திரனுக்கு நமஸ்காரம்.

20. யம வந்தனம்—யமனுக்கு நமஸ்காரம். அனைத்தையும் அடக்கி ஆள்பவனையும், தரும தேவதையாயும் அழிப்பவனையும் முடிப்பவனையும் விவ்ஸ்வானுடைய புத்திரனையும் கால ஸ்வரூபியாயும் எல்லாப் பிராணிகளையும் ஒழிப்பவனையும், மிக்க பலசாலியாயும்

ஔதும்பராயதத்னய நீலாய பரமேஷ்டினே | வ்ருகோ-தராய சித்ராய சித்ரகுப்தாய வை நம: || சித்ரகுப்தாய வை நம ஓம் நம இதி ||

## 21. ஹரிஹர வந்தனம்

ருதம் ஸத்யம் பரம் ப்ரஹ்ம புருஷம் க்ருஷ்ண-பிங்களம் | ஊர்த்வரேதம் விரூபாக்ஷம் விஶ்வரூபாய வை நம : | விஸ்வரூபாய வை நம: ஓம் நம இதி ||

---

தத்னன் என்ற பெயருடையவனும் கரியமேனி உடையவனும் எல்லோராலும் பூஜிக்கப்பட்டவனும் பெரு வயிறு படைத்தவனும் விசித்திரமானவனும் விசித்திரமாய்த் தன் ரகசியத்தைக் காப்பவனும் உள்ள யமதர்மராஜனுக்கு நமஸ்காரம். மீண்டும் சித்ரகுப்தனுக்கு நமஸ்காரம். 'ஓம் நம:' என்று.

21. ஹரிஹர-வந்தனம்—காணும் பொருட்களின் அழகாயும் காட்சிக்கு ஆதாரமாயும் உள்ள பரப் பிரம்மத்தை, உடல் தோறும் உறைபவனைக் கரு மேனித் திருமாலும் செம்மேனிச் சிவனும் ஒன்ருயியைந்த வடிவை, வீரியத்தின் மேல் நோக்குடையவனை, முக்கண்ணனை, எல்லாந் தன் வடிவாய்க் கொண்டவனை நமஸ்கரிக்கின்றேன். எல்லாந் தன் வடிவாய்க் கொண்டவனுக்குப் பன்முறை நமஸ்காரம் 'ஓம் நம:' என்று.

## 22. ஸூர்யநாராயண வந்தனம்

நம: ஸவித்ரே ஜகதேக-சக்ஷுஷே ஜகத்ப்ரஸூதி-ஸ்திதி-நாஸ-ஹேதவே | த்ரயீமயாய த்ரிகுணத்ம-தாரிணே விரிஞ்சி-நாராயண-ஸங்கராத்மனே ||

த்யேய: ஸதா ஸவித்ருமண்டல - மத்யவர்த்தீ நாராயண: ஸரஸிஜாஸந-ஸந்நிவிஷ்ட: | கேயூரவான் மகர - குண்டலவான் கிரீடீ ஹாரீ ஹிரண்மய-வபுர் த்ருத-ஸங்க-சக்ர: ||

---

22. ஸூர்ய நாராயண வந்தனம்—உலகிற் கெல்லாம் ஒரு கண்ணாக விளங்குபவரும், உலகின் சிருஷ்டி ஸ்திதி ஸம்ஹார காரணரும், வேதஸ்வரூபியும் முக்குணத்தால் மூன்று வடிவம் தாங்கி, பிரம்மா, விஷ்ணு, சங்கரன், என்ற மூர்த்திகளில் விளங்குபவரும் ஆகிய சூரியதேவனுக்கு நமஸ்காரம்.

சூரியமண்டல மத்தியில் உறைபவரும் பத்மாஸனத்தில் அமர்ந்திருப்பவரும் தோள்வளையும் காதில் மகர குண்டலமும், சிரசில் கிரீடமும், மார்பில் முத்து மாலையும் அணிந்தவரும் சங்கும் சக்கரமும் ஏந்தியவரும் பொன்போலொளிரும் திருமேனியுடையவருமான நாராயணர் எப்போதும் தியானித்தற்குரியவர்.

ஶங்க-சக்ர-கதா-பாணே த்வாரகா நிலயாச்யுத |
கோவிந்த புண்டரீகாக்ஷ ரக்ஷ மாம் ஶரணாகதம் ||
ஆகாஶாத் பதிதம் தோயம் யதா கச்சதி ஸாகரம் |
ஸர்வதேவ-நமஸ்கார: ஶ்ரீ கேஶவம் ப்ரதி கச்சதி ||
ஶ்ரீ கேஶவம் ப்ரதி கச்சதி ஓம் நம இதி ||
அபிவாதயே + அஸ்மி போ: || (நமஸ்கார:) ||

## 23. ஸமர்ப்பணம்

காயேன வாசா மனஸேந்த்ரியைர்-வா புத்த்யாத்

---

சங்கு சக்கரம் கதை இவைகளைக் கையில் ஏந்தியவரே! துவாரகையில் நித்தியவாஸம் செய்ப வரே! அடியாரை நழுவவிடாதவரே! உலகரக்ஷகரே! தாமரை போன்ற கண்களையுடையவரே! சரணடைந்த என்னைக் காத்தருளும்.

ஆகாயத்திலிருந்து விழுந்த நீர் ஸமுத்ரத்தை நோக்கி எவ்வாறு சென்றடைகின்றதோ அவ்வாறே எல்லா தேவர்களுக்கும் செய்யும் நமஸ்காரம் கேசவனையே நாடி அடைகின்றது. ஶ்ரீ கேசவனையே நாடி அடைகின்றது. 'ஓம் நம:' என்பாம்.

அபிவாதயே...அஸ்மி போ: என்று நமஸ்காரம்,

**23.** ஸமர்ப்பணம்—சரீரத்தாலோ வாக்காலோ மனத்தாலோ கருமேந்திரியங்களாலோ ஞானேந் திரியங்களாலோ இயற்கையின் இயக்கத்தாலோ எது எதைச் செய்கிறேனோ அது எல்லாவற்றையும் பரம புருஷனாகிய நாராயணனுக்கே என்று ஸமர்ப்பிக் கின்றேன். (ஆசமனம்)

மனுவா ப்ரக்ருதே: ஸ்வபாவாத் | கரோமி யத்யத் ஸகலம் பரஸ்மை நாராயணாயேதி ஸமர்ப்பயாமி ||

(ஆசனம்) ||

## 24. ரக்ஷா

அத்யா நோ தேவ ஸவிதா: ப்ரஜாவத் ஸாவீ: ஸௌபகம் | பரா துஷ்வப்னியம ஸுவ ||

விஸ்வானி தேவ ஸவிதர்-துரிதானி பரா ஸுவ | யத் பத்ரம் தன்ம ஆஸுவ: ||

இதி ஸந்த்யாவந்தன | உத்தரபாக; ||

---

24. இரக்ஷை அல்லது காப்பு— ஸவித்ரு தேவனே! இப்போது எங்களுக்கு ஸந்ததிகளுடன் கூடிய ஸௌபாக்கியத்தை அருளவேண்டும். கெட்ட கனவின் நிமித்தத்தையும் பலனையும் விலக்கி யருள் வீர். ஸவித்ரு தேவனே! எல்லாப் பாவங்களையும் விலக்கி யருள்வீர். எது உயர்ந்த நன்மையோ அதை எனக்கு கூட்டிவைத்து அருளுதல் வேண்டும்.

இங்ஙனம் ஸந்தியாவந்தன உத்தரபாகத்திற்குப் பொழிப்புரை முற்றிற்று.

---

## ஆவணி அவிட்டம்

இதுதான் இதற்குச் சரியான பெயர்; ஆவணியா வட்டம் அல்ல. பெயர் சரியான பெயரேயானாலும் இதுவும் அர்த்தத்தில் சரியில்லை. ஆவணிப் பூர்ணிமை என்றே சொல்ல வேண்டும். ஆவணிப் பூர்ணிமை என்று சொல்வதுகூடத் தப்பு. 'ச்ராவண பூர்ணிமை' என்றே சொல்ல வேண்டும். சாந்திரமானக் கிரமத்தில் ச்ராவண மாதத்தில் பூர்ணிமையன்று வேறு தோஷங்கள் எவையும் இல்லாமலிருந்தால் உபாகர்மா என்ற ஒரு கர்மாவை ஆபஸ்தம்பிகள் செய்ய வேண்டும். ச்ராவண பூர்ணிமை அநேகமாக ஆவணி மாதத்து அவிட்ட நக்ஷத்திரத்தில் வந்து சேரும். அதனால் அதற்கு ஆவணி அவிட்டம் என்றும் தவறுதலாக சொல்லிச் சொல்லி ஆவணியாவட்டம் என்றும் ஆகிவிட்டது.

இதே உபாகர்மாவை ரிக்வேதிகள் ச்ராவண மாதத்தில் வரும் ச்ராவண நக்ஷத்திரத்தில் அதாவது திருவோண நக்ஷத்திரத்தில் செய்ய வேண்டும். ஸாமவேதிகள் ச்ராவண மாதத்துக்கு அடுத்த பாத்ரபத மாதத்தில் ஹஸ்த நக்ஷத்திரத்தில் செய்ய வேண்டும்.

## உபாகர்மா செய்வதற்கு உத்தேசம் என்ன?

எந்தக் கர்மாவையும் செய்வதற்கு உத்தேசம் என்ன என்பதை, அந்தக் கர்மாவில் உபாத்தியாயர் சொல்லும் ஸங்கல்பத்தைக் கவனித்தால் தெரியும். ஸங்கல்பம் சொல்லும் சொல்லும்போதே, "உபாத்தி

யாயரே, ஸங்கல்பத்துக்கு அர்த்தம் சொல்லுங்கள்" என்று கேட்க வேண்டும். அப்பொழுதுதான், அவருக்காவது அர்த்தம் தெரிந்துகொள்ள வேண்டும் என்ற அக்கறை ஏற்படும் ரிக்வேதிகளுடைய ஸங்கல்பம் இது:

அதீதாநாம் சந்தஸாம் அயாதயாமத்வாய
அத்யயநவீர்யவத்தார்த்தம்

இதன் தாத்பர்யம்:—யாதயாமம் இல்லாதது அயாதயாமம். யாதயாமம் என்றால் என்ன? பகவத் கீதையில்கூட, "யாதயாமம் கதரஸம் பூதி பர்ஷிதம் சயத்" என்று கேட்டிருக்கிறோம் அல்லவா? ஒரு யாமம் என்றால் மூன்று மணி நேரம். சமையல் செய்து மூன்று மணி நேரமாகிவிட்டால் அன்னத்தில் சாரம் போய்விடுகிறது. அதைக் கொண்டுதான் உபயோகத்துக்கு அநர்ஹமான பொருள்களிலெல்லாம் 'யாதயாமம்' என்ற சொல் வழங்குகிறது. அன்னத்துக்கு மூன்று மணி. அதைப்போல் அந்த அந்தப் பதார்த்தங்களுக்குக் குறிப்பிட்ட சில காலம் வரையில் சாரம் இருக்கும். தாண்டிப் போனால் சாரம் குறைந்துவிடும். வேதத்துக்கும் அப்படித்தான், உபநயனமாகி, முதல் ஆவணி அவிட்டத்தன்று வேதாரம்பம் செய்கிறார்கள். அதை அடுத்த புஷ்ய மாஸத்தில் யஜுர் வேதிகளுக்கும், மாக மாதத்தில் ரிக் வேதிகளுக்கும் உத்ஸர்ஜன் கர்மாவைச் செய்துவிட்டு, வேதாத்யயனத்தை நிறுத்திவிட்டு, அடுத்த ஆறு மாத காலங்களில் சிக்ஷை, வியாகரணம், சந்தஸ், நிருக்தம், ஜோதிஷம், கல்பஸூத்ரம், இந்த ஆறு அங்கங்களில்

யதாசக்தியான பாகங்களை அத்யயனம் செய்ய வேண்டும். பிறகு அடுத்த வருஷம் ச்ராவண மாதத்தில் உபாகர்ம தினத்தில் உபாகர்மாவைச் செய்து, வேதமந்த்ராத்யயனத்தைப் புனராரம்பம் செய்ய வேண்டும். இந்த வேதாரம்ப கர்மாவுக்கே உபாகர்மா என்று பெயர். இவ்விதம் உபாகர்மாவைச் செய்தால் தான் நம்மிடம் இருக்கும் சொல்ப வேத மந்திரம் வீரியத்துடன் கூடியதாக இருக்கும். இல்லாவிட்டால், பகவத்கீதையில் அன்னத்துக்குச் சொல்லி யிருப்பது போல் யாதயாமமாக ஆகிவிடும்.

நம்மிடம் இருக்கும் ஒரு காயத்ரி மந்த்ரத்துக்காவது வீரியம் இருக்க வேண்டுமானால், உபாகர்மா என்னும் கர்மாவைத் தாத்பர்யங்களை மனத்தில் வாங்கிக் கொண்டே மந்த்ரலோபமில்லாமல் அநுஷ்டித்தாக வேண்டும். சிரத்தையோடு உபாகர்மா செய்யாத குறையினால் தான், இக்காலத்தில் செய்யும் சில கர்மாக்கள்கூட' மந்த்ரவீர்யம் இல்லாததனால் பயனில்லாமல் போய் விடுகின்றன. ஆகையால் உபாகர்மா அவசியம் செய்ய வேண்டும்.

ஒரு மந்த்ரத்தை நாம் ஆரம்பிக்க வேண்டுமானால், அந்த மந்த்ரத்தை நமக்கு ஆதியில் கொடுத்த ரிஷிகளையும் தேவதைகளையும் பூஜித்து, அவர்களின் அநுக்கிரகத்தைப் பெற்றுக்கொண்டு ஆரம்பித்தால் தான் பயன் தரும். அவர்களுடைய தப:சக்தி அந்த மந்த்ரமூலமாய் நம்மை அடையும். அவர்களைப் பூஜிக்கும் முறை மூன்று விதம். அவர்களை ஓர் இடத்தில் ஆவாகனம் செய்து (தர்ப்ப கூர்ச்சத்திலோ,

பூர்ண கும்பத்திலோ, எலுமிச்சம்பழத்திலோ, பாக்குப் பழத்திலோ, பிடித்து வைத்த மணலிலோ) ஷோட சோபசாரங்களால் பூஜிப்பது ஒரு முறை. அந்த ரிஷி களை உத்தேசித்துத்தீர்த்தத்தினுல்தர்ப்பணம்செய்வது ஒரு முறை. இரண்டையும்விட வீர்யவத்தான முறை, அவர்களை உத்தேசித்து அக்னிமுகத்தில் ஹோமம் செய்வது.

ஆதலால் ஆவணியவிட்டம் நடக்கும்போது ஹோம காலத்தில் ஓர் உபாத்தியாயர் ஹோமம் செய்துகொண்டிருந்தால் மற்ருேர் உப வாத்தியார் இப்பொழுது இன்னரிஷி, தேவதைக்கு ஹோமம் நடக்கிறது என்று கிருகஸ்தர்களுக்குச் சொல்லிக் கொண்டிருக்கும்படி ஏற்பாடு செய்ய வேண்டும்.

**இதைவிட ஒரு முக்கியமான கார்யம்:**

ஆவணியவிட்டத்துக்கு முன் ஞாயிற்றுக் கிழமை யில் கூடியவரையில் கிருகஸ்தர்கள் எல்லாரும் ஓரிடத் தில் சேர்ந்து விஷயம் தெரிந்த வாத்தியார்களை அழைத்து வைத்துக்கொண்டு, உபாகர்மப் பிரயோ கங்களைக் கிரமமாக, பூர்த்தியாக, அர்த்தத்துடனும் தாத்பர்யத்துடனும் சொல்லச்சொல்லிக் கேட்டு, உபாகர்மா தினத்தன்று மறந்து போகாமல் அந்த அந்த விஷயங்களை மனதில் ஞாபகத்துடன் அநுஷ் டிக்க வேண்டும்.

குறிப்பு:—இது பொதுவாக எழுதியிருக்கிறது. தேவகார்யம், பித்ருகார்யம், உபாகர்மா முதலியவை களை நம் வம்சத்துப் பெரியோர்கள் எந்த முறையில்

அநுஷ்டித்து வந்தார்களோ அந்த முறையைத் தெரிந்து கொண்டு அநுஷ்டிப்பது நலம்.

## காயத்ரி ஜபம்

அநேகமாக ஆவணி அவிட்டத்துக்கு மறுநாள் காயத்ரி ஜபம் வருகிறது. இதற்கு, 'காயத்ரீ ஜபம்' என்ற பெயரைவிட, காயத்ரீ ஹோமம் என்ற பெயரே தகுதியுள்ளது.

நாம் எல்லாரும் அநேகமாய் ஆபஸ்தம்பஸூத்ரம் என்று சொல்லிக்கொள்ளுகிறோம். நம்மில் சிலர் ஆச்வலாயன ஸூத்ரிகளும், போதாயன ஸூத்ரிகளும், காத்யாயன ஸூத்ரிகளும், த்ராஹ்யாயண ஸூத்ரிகளும், ஹிரண்யகேசீய ஸூத்ரிகளுமாக இருக்கின்றனர். ஆனால் எல்லாருக்கும் ஆபஸ்தம்ப மகரிஷியே இந்த காயத்ரீ ஜப விதானத்தை உபதேசித்திருக்கிறார். ஆபஸ்தம்பர் தமது தர்மஸூத்ரத்தில் ச்ராவண மாஸம் க்ருஷ்ணபக்ஷம் ப்ரதமை திதியில் "காயத்ர்யா ஸமித்ஸஹஸ்ரம் ஆதத்யாத் ஜபேத் வா" என்று எழுதியிருக்கிறார். ஆயிரம் ஸமித்துக்களை ஒரு ஸமித்துக்கு ஒரு காயத்ரீ மந்த்ரத்தை ஜபித்துக் கொண்டு அக்கினியில் ஹோமம் செய்ய வேண்டியது அல்லது ஆயிரம் காயத்ரீ ஜபமாத்திரமாவது செய்ய வேண்டியது.

இப்போது நம்முடைய நாட்டில் ப்ரதம ச்ராவண ப்ரஹ்மசாரி மாத்திரந்தான் காயத்ரீ ஸஹஸ்ர ஹோமம் செய்வது என்பது அநுஷ்டானத்தில் இருந்துவருகிறது. ஆனால் மகரிஷியின் அபிப்பிராயம்,

எல்லாக் கிருகஸ்தர்களும் பிரம்மசாரிகளும் அன்றைத் தினம் ஸஹஸ்ரஹோமம் செய்யவேண்டியது என்பது தான். ஹோமம் செய்ய முடியாதபடி ஏதாவது விசேஷ அசந்தர்ப்பம் ஏற்பட்டால்தான் ஜபமாவது செய்யட்டும் என்பது மகரிஷியின் கருத்து. ஆகையால் எல்லாப் பிரம்மசாரிகளும் கிருகஸ்தர்களும் ஆயிரத்துக்குக் குறையாமல் ஸமித்துக்களைத் தயார் செய்து கொண்டு அன்றைத் தினம் சம்பிரதாயப் பிரகாரம் ஸங்கல்பம் செய்துகொண்டு ஹோமம் செய்ய வேண்டும். அன்று விடியற்காலையில் ஏதாவது ஒரு மகாநதிக்குச் சென்று ஸ்நானம் செய்துவிட்டு, எட்டு மணி சுமாருக்கு ஹோமம் ஆரம்பிக்க வேண்டும். இந்த ஹோமத்தை ஒரு பிராயச்சித்த கர்மாவாக வருஷந்தோறும் இந்தத் தினத்தில் செய்ய வேண்டியது. பிராயச்சித்த கர்மாக்களெல்லாம் ஸங்கவ காலத்திலேயே செய்யப்பட வேண்டியவை. ஸங்கவ காலம் என்றால் காலை மணி 8-24 முதல் 10-48 வரையுள்ள காலம். பகலை ஐந்து காலங்களாகச் சாஸ்திரங்களில் பிரித்திருக்கிறார்கள். 1. பிராத: காலம், 2. ஸங்கவ காலம், 3. மாத்தியாஹ்ன காலம், 4. அபராஹ்ன காலம், 5. ஸாயங்காலம். ஒரு காலத்துக்கு ஆறு நாழிகை வீதம் பகல் முப்பது நாழிகைகள் ஐந்து காலங்களாகப் பிரிக்கப்படுகின்றன.

## காயத்ரீ ஜபத்துக்குச் சங்கல்பம் என்ன?

பிரம்மச்சாரிகள் செய்ய வேண்டிய சங்கல்பத்தின் உத்தேசம் வருமாறு:

அபதநீயதோஷப்ராயஸ்சித்தார்த்தம் மித்யாதீதப்ராயஸ்சித்தார்த்தம்,ஸம்வத்ஸரப்ராயஸ்சித்தார்த்தம் ச,

இவைகளில், மித்யாதீதப்ராயஸ்சித்தார்த்தம் முக்கியமானது. அதாவது நாம் வருஷம் முழுவதிலும் அந்த அந்தச் சந்தர்ப்பங்களில் உச்சரிக்கும் வேதமந்த்ரங்களில் வர்ணலோபம் அல்லது ஸ்வர லோபம் ஏற்பட்டிருந்தால் அதனுல் ஏற்படும் தோஷத்துக்கு ச்ராவண பூர்ணிமைக்கு அடுத்த க்ருஷ்ணபக்ஷ ப்ரதமையில் செய்யும் காயத்ரீ ஹோமம் பிராயச்சித்த மாகிறது. இந்தத் தோஷத்துக்கு மட்டுமல்ல. பிரம்மசர்யாச்ரமத்தில் இருக்கும் மாணவன் தன் வீட்டில் சாப்பிடக்கூடாது; தன் வீட்டில் வசிக்கக்கூடாது. எவ்வளவு பணக்காரனுயிலும் பிக்ஷை எடுத்துச் சாப்பிட்டுக்கொண்டு, குருவின் வீட்டில் வசித்துக் கொண்டு காலை மாலைகளில் அக்கினியை உபாசித்துக்கொண்டு, குருவினிடத்தில் வித்தியாப்பியாசம் செய்யவேண்டும். எழுத்திலக்கணம் (சிக்ஷை), சொல்லிலக்கணம் (வ்யாகரணம்), பாவிலக்கணம் (சந்தஸ்), நிகண்டு (நிருக்தம்), கணிதத்துடன் வான சாஸ்த்ரம் (ஜ்யோதிஷம்), கர்மா நுஷ்டான முறை (கல்பஸூத்ரம்) என்னும் அங்கங்கள் (சடங்கு) கூடிய ஒரு வேதத்தையாவது அப்பியஸித்தபின் ஸமாவர்த்தனம் என்னும் கர்மாவைச் செய்து கொண்டு பின்னரே வீட்டுக்குத் திரும்பவேண்டும். இந்த முறைக்கு மாருகப் பிரம்மசாரிகள் நடப்பார்களேயானுல் தர்மத்தை மீறிநடக்கும் தோஷத்துக்குப் பாத்திரமாகிருர்கள். இவ்வகைத் தோஷத்துக்கும் காயத்ரி ஹோமம் பிராயச்சித்தமாகும். மொத்தமாகச் சென்ற வருஷத்தில் செய்த எல்லா தோஷத்துக்குமே இந்தக் காயத்ரி ஹோமம் பிராயச்சித்தமாகும்.

எல்லாத் தோஷங்களுக்கும் என்பதனுல் எந்தத் தப்பைச் செய்தாலும் இந்தக் காயத்ரி ஜபம் செய் தால் அது ஜீர்ணமாகி விடும். என்று இல்லை தனிப் பிராயச்சித்தம் செய்துகொள்ள வேண்டிய சில தோஷங்கள் உண்டு. பொதுவாகப் பாவங்கள் சாஸ் திரங்களில் இரு வகையாகப் பிரிக்கப்படுகின்றன. ஒன்று, பதநீயங்கள்; மற்றென்று அபதநீயங்கள். பத நீயங்கள் என்ருல் ஒருவனைப் பதிதனுக்கக்கூடிய கொடுஞ்செயல்கள். அவ்வளவு கடுமையில்லாத சாமானியப் பாவங்கள் அபதநீயங்கள். சென்ற வரு ஷம் செய்த அபதநீயப் பாவங்களுக்கெல்லாம் இந்தக் காயத்ரி ஹோமம் பரிகாரமாகிறது. இதே மாதிரி கிருகஸ்தர்களும்,

கார்ஹஸ்த்யநியமேந ஔபாஸந-வைச்வதேவ-பஞ்சமஹாயஜ்ஞாதி - அகரணப்ராய ஸ்சித்தார்த்தம் அபதநீயதோஷ ப்ராயஸ்சித்தார்த்தம் மித்யாதீத-ப்ராயஸ்சித்தார்த்தம் ஸம்வத்ஸரப்ராயஸ் சித்தார்த் தம் ச.

நித்தியம் செய்யவேண்டிய ஐந்து மகாயஜ்ஞுகள் இருக்கின்றன. அவையாவன: தேவ யஜ்ஞும், பித்ரு யஜ்ஞும், பூதயஜ்ஞும், மனுஷ்ய யஜ்ஞும், ப்ரஹ்ம யஜ்ஞும் என்பவை. தேவயஜ்ஞும் என்பது, தேவர்களை உத்தே சித்து அக்கினியில்ஹோமம்பண்ணவேண்டியது. அது அக்கினிஹோத்ரமாகஇருந்தாலும்சரி, ஔபாஸனமாக இருந்தாலும் சரி, ச்ரௌத கர்மாவோ, ஸ்மார்த்த கர்மா வோ, பிரதிதினம் அவசியம் செய்தாகவேண்டும். பித்ரு யஜ்ஞும் என்பது பித்ருக்களை உத்தேசித்து ச்ராத்தம்,

தர்ப்பணம் முதலியவைகளைச் செய்வது. பூத யஜ்ஞம் என்பது; உலகத்திலுள்ள ஸகல ஜந்துக்களையும் மனத்தால் உத்தேசித்து யதாசக்தி மந்த்ரபூர்வமாக நாம் சமர்ப்பிக்கும் ஆகாரம். மனுஷ்ய யஜ்ஞம் என்பது அதிதிகளுக்கு அன்னம் போடுவது. ப்ரஹ்ம யஜ்ஞம் என்பது தன்னுடைய வேதத்தில் ஒரு ப்ரச்னமோ, முடியாவிட்டால் ஓர் அநுவாகமோ, அதுவும்முடியாவிட் டால்ஒரு பஞ்சாதியோ அல்லது ஒரு ரிக்காவது பிரதி தினம் அத்தியயனம் செய்து தர்ப்பணம் செய்வது. இதில் ஏதாவது செய்ய முடியாமல் விட்டுப் போயிருந் தாலும் ஸம்வத்ஸரப் பிராயச்சித்தமாகப் பக்திசிரத்தை யுடன் காயத்ரீ ஹோமத்தையாவது ஜபத்தையாவது மனத்துக்குள் ஸ்வரத்துடன் ஐந்து பாதமாகச் சொல்லிக் கொண்டு பண்ணிவந்தால் மேற்சொன்ன வற்றுக்குப் பரிகாரமாகும்.

ஓர் வேண்டுகோள்:—வேதங்களை முறை தவறிச் சொன்ன தோஷத்துக்குப் பிராயச்சித்தமாகக் காயத்ரி ஜபம் ஏற்பட்டிருக்கிறது. காயத்ரி ஜபம் செய்யும் காலத்திலும் அக்ஷரம் தவறுதலாகவும், ஸ்வரம் தவறுதலாகவும் செய்தோமானால் வேறு கதியேஇல்லை. ஆகையால்,காயத்ரி ஜபத்துக்கு இரண்டு நாள் முன்ன தாகவே நாம் உச்சரிக்கும் காயத்ரி மந்த்ரம் அக்ஷர லோபம் ஸ்வரலோபம் இல்லாமல் இருக்கிறதா என்பதை ஆங்காங்குள்ள பெரியோர்களிடம் சொல்லித் திருத்திக் கொள்ள வேண்டும். காயத்ரி ஜபத்துக்கு முதல் நாள், மறு நாள் காயத்ரி ஹோம மோ ஜபமோ செய்பவர்கள் எல்லாருமே, எள்ளு தானி யத்தை ப்ராசனம் செய்துவிட்டு, அன்று முடிய

